# குறிப்பு.

இந்நூலின் முதற்பதிப்பு என் தந்தையாரவர்களால் 1939-ம் வருஷத்திற் குறிப்புரை முதலியவற்றுடன் கலைமகளின் பதினோராம் வெளியீடாகப் பதிப்பிக்கப்பெற்றது. நூலைப்பற்றிய முக்கியமான வரலாறுகளெல்லாம் அவர்களுடைய முகவுரையால் நன்கு விளங்கும்.

சென்னை.
22—7—47

S. கலியாணசுந்தரையர்.

Printed at fhe Vidyanubalana Press, Madras, and
Published by: S. Kalyanasundaram Ayyar.
Issue Card No, M. S. 376 500-Copies. 5-8-47.

# முதற்பதிப்பின் முகவுரை.

திருமாலுக்குரிய திருப்பதிகள் நூற்றெட்டு; அவற்றுள் ஒன்றாகிய தென்திருப்பேரை யென்பது தென்பாண்டி நாட்டிலுள்ள நவதிருப்பதிகளுள் ஒன்றாகவும் விளங்குகின்றது. அங்கே எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருநாமம் மகரபூஷணப்பெருமாளென்பது; தமிழில் மகரநெடுங்குழைக்காதரென வழங்கும். அப்பெருமான் விஷயமாக நாராயண தீக்ஷிதரென்னும் ஸ்ரீ வைஷ்ணவப்பெரியரால் இயற்றப்பெற்றது இப்பாமாலை.

இது நம்மாழ்வார் காப்புச்செய்யுள் ஒன்றும், பெரிய திருவடிகளின் வணக்கச்செய்யுள் ஒன்றும், வாழ்த்து ஒன்றும் சேர்ந்து நூற்றுமூன்று கட்டளைக்கலித்துறைகளால் ஆகியது. இப்பாமாலை பாடப்பெற்ற வரலாறு வருமாறு:—

திருச்சிராப்பள்ளியில் சொக்கநாத நாயக்கருடைய அரசாட்சியில் அவருடைய பிரதிநிதியாகத் திருநெல்வேலிச்சீமையை வடமலையப்பப் பிள்ளையனென்பவர் ஆண்டு வந்தார். அவரைப் பிள்ளையனென்றே பெரும்பாலும் வழங்குவர். அவர் கார்காத்த வேளாளர் வகுப்பில் உதித்தவர்; நல்ல கல்வியறிவும், தெய்வபக்தியும், ஒரு செயலை முற்பட ஆராய்ந்து முடிக்கவல்ல திறனும் வாய்ந்தவர். அவருடைய ஆட்சியில் குடிகள் யாவரும் நன்மை அடைந்தனர். அவர் தமிழறிவும் நிரம்பியவர்; மச்சபுராணம் நீடூர்த்தலபுராணம் என்பவற்றை இயற்றி யிருக்கிறார். இவற்றையன்றி ஒரு கோவையும் வண்ணமும் கலம்பகமும் அவர் இயற்றியுள்ளாரென்று தெரியவருகின்றது. அவர் இயற்றிய அறச்செயல்களும், தேவாலயத் திருப்பணிகளும் பல. அவரைப் பாராட்டிப் புலவர்கள் பாடிய தனிப்பாடல்கள் பல இப்பொழுதும் தமிழ்நாட்டில் வழங்குகின்றன.

தமிழ்ப்புலவர்களிடத்தில் வடமலையப்பப் பிள்ளையனுக்கு அதிக அன்பு உண்டு. அவருடைய ஆதரவில் பல வித்துவான்கள் தம் தமிழறிவை வளர்த்து இன்புற்று வாழ்ந்தார்கள். அவரிடம் பணிபுரிந்து வந்த அதிகாரிகளும் அவருடைய தண்டமிழறிவையும் தமிழ் வித்துவான்கள்பால் அவருக்குள்ள பேரன்பையும் அறிந்து தாமும் தமிழபிமானமும் தமிழ்ப்புலவர்பாலன்பும் உடையவராக முற்பட்டனர்.

அக்காலத்தில் தென்திருப்பேரையில் நாராயண தீக்ஷிதர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் தலவகார சாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர் குடியிற் பிள்ளைமங்கலத்தாரென்ற குடும்பத்திலே பிறந்தவர். பல வருஷங்களுக்குமுன் சுந்தர பாண்டியரென்னும் அரசர் பல வூர்களில் வசித்த நூற்றெட்டுத் தலவகார ஸாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் குடும்பத்தைத் தென்திருப்பேரையில் அமைத்து அக்குடும்பத்தினருக்கு வீடுகளும் நிலங்களும் வழங்கினரென்பர்; அந்நூற்றெட்டுக் குடும்பத்தின் வழி வந்தவர்கள் இன்னும் அவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர். தலவகாரமென்றது சாம வேதத்தின் சாகைகளுள் ஒன்று.

நாராயண தீக்ஷிதர் தமிழ்நூற் பயிற்சியும் மகரநெடுங்குழைக்காதரிடத்தில் பக்தியும் உடையவர். நம்மாழ்வாரிடத்தில் அளவற்ற அன்பினர். தென்திருப்பேரைக்கு அருகிலுள்ள ஆழ்வார் திருநகரிக்குத் தினந்தோறும் சென்று அங்கே எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாரைத் தரிசித்து வருவார். அவருக்கு நம்மாழ்வார் தாசரென்றும் ஒரு பெயர் வழங்கும். தீக்ஷிதருக்கு நிலம் வீடு முதலியன இருந்தன. அவற்றை வைத்துக்கொண்டு மகரநெடுங் குழைக்காதரைத் தரிசிப்பதும் தமிழ் நூல்களைப் படித்து இன்புறுவதுமாகிய நற்காரியங்களில் அவர் பொழுதுபோக்கி வாழ்ந்து வந்தார்.

பயிர் செவ்வையாகப் பயன்தராமையின் ஒரு வருஷம் நாராயண தீக்ஷிதராலும் அவர் இனத்தவர்கள் சிலராலும் அரசிறையைச் செலுத்த முடியவில்லை. அக்காலத்தில் அவ்வரியை வசூல் செய்வதற்கென்று ஓர் அதிகாரியை வடமலையப்பப்பிள்ளையன் நியமித்திருந்தார். அவர் ஒரு வன்னெஞ்சர்; அதிகாரத்துக்கு அழகு பிறர்பால் அதனைச் செலுத்தி அவர்களை நடுங்கவைப்பதேயென னும் கொள்கையையுடையவர்; தெய்வபக்தி, தமிழ்ப்பற்று என்பவற்றைச் சிறிதும் அறியாதவர். தமிழ்ப்புலவர்கள், தெய்வபக்தர்கள் என்பவர்களுடைய பெருமை இன்னதென்பதை அவர்களோடு பழகித்தானே அறியவேண்டும்? தமது அதிகாரமிடுக்கில் பிறரை மதியாமல் வாழ்பவருக்கு இந்த நல்லோர்களின் உறவு எங்ஙனம் கிடைக்கும்?

நாராயண தீக்ஷிதரும் பிறரும் தாம் வரி செலுத்த இயலாத நிலையில் இருப்பதைப் பணிவாக அவரிடம் தெரிவித்து, இயலுங் காலத்திற் செலுத்தி விடுவதாக நயந்து கேட்டுக்கொண்டனர். ஆனால் அவ்வதிகாரி அதற்கு இணங்காமற் சிறிதேனும் இரக்க

யின்றி அவர்களைத் திருநெல்வேலி நகரத்திற்குக் கொணர்ந்து சிறையில் இடுவித்தார். அச்சிறைக்கூடம் இருந்த தெரு இப்போதும் காவற்புரைத்தெரு என்னும் பெயரால் வழங்கி வருகிறதென்று சொல்லுகிறார்கள்.

சிறைப்பட்ட தீக்ஷிதரும் பிறரும் தம்முடைய் வினையை நினைந்து நொந்து வருந்தினர். அவர்கள் சிறைப்பட்டதனால் தமக்கு இழிவு உண்டாயிற்றென்று வருந்தவில்லை; குழைக்காதரைப் பிரியும் காலம் நேர்ந்ததே என்பதை நினைந்தே மிகவும் இரங்கி நைந்தனர்.

ஒவ்வொரு நாளும் நாராயண தீக்ஷிதர் குழைக்காதரையும், நம்மாழ்வாரையும் சேவிக்கும் இயல்பினர். ஊணும் உறக்கமும் ஒழிந்தாலும் இந்தச் சேவையைத் தவறாமற் புரிந்து வந்தார். அத்தகையவருக்குச் சிறைவாசம் பெருந்துன்பத்தை அளித்தது. 'நாம் செய்த பழவினைப்பயனே இங்ஙனம் வந்து சேர்ந்தது. குழைக்காதர் நமக்கு விதித்த தண்டனை இது போலும். மனிதர்களுடைய மனத்தைக் குழைக்கும் வகை நாம் அறியோம். அதை அப்பெருமான் அறிவார். அதனால் அவரை நோக்கிக் கதறி முறையிடுதலே தகுதியான செயல். எங்கும் செவியுடைய அவர் நம் முறையீட்டைக் கேட்பார். சூரியன் வானத்திலிருந்தாலும் பூமியிலுள்ள தாமரையை மலர்த்துகின்றான். வானிலுள்ள சந்திரன் பூவுலகிலுள்ள குமுதமலரை மலர்த்துகின்றான். அவ்வாறே நாம் எங்கே இருந்தாலும் மகரநெடுங்குழைக்காதர் நம்மை இரட்சிப்பார். *இனிப் பாமாலை சூட்டி அவரை நோக்கி உருகி வழிபடுதல் தான் வழி' என்று துணிந்தார்.

இங்ஙனம் துணிந்து குழைக்காதர் விஷயமாக ஒரு நூல் செய்யத் தொடங்கினார். ஒவ்வொரு நாளும் சில செய்யுட்களைப் பாடித் திருப்பித் திருப்பி அவற்றைச் சொல்லி உருகிப் பிரார்த்திக்க ஆரம்பித்தார். அந்த நூலே இப்பாமாலை ஆகும். அவருடன் இருந்தவர்களும் சில செய்யுட்களை இயற்றத் தொடங்கினார்கள்.

தீக்ஷிதர், நூலைத்தொடங்கும்போது வழக்கம்போல நம்மாழ்வாருக்குக் காப்புக் கூறினார். அக்காப்பிலேயே, "அடியேங்கடுன்ப மகல்வதற்கா வந்த நான்மறையின், முடியே பரவுங் குழைக்காதர் மீதமுதுதமிழாற், படியேழு மோங்கியே பாமாலை யீரைம்பது" என்று சங்கற்பம் செய்துகொண்டார். அடுத்தபடி கருடனைத்

* செய்யுள், 34.

துதிக்கையில், "என் சிறை நீக்குவித்தாயில்லையே" என்று இரங்கினர்.

"நாங்கள் பசுவைப் பிரிந்த கன்றைப்போல வருந்துகிறோம். எங்கள் குழைக்காதருக்கு எப்போது கருணை உண்டாகுமோ! வாயில்லாத பசுக்களைக் காப்பாற்றுவதற்காகக் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்த கருணையாளரல்லவோ அவர்? அவரைப் பிரிந்திருக்கும் நாங்கள் மீட்டும் அவரை எப்பொழுது சென்று தொழுவோம்! எங்களை அவரிடமிருந்து பிரித்து வைத்திருக்கும் பாவம் எப்போது தீரும்!" என்று முதற்பாட்டிலேயே அவர் மனம் நைந்து பாடினர்.

"எந்தக் காலத்திலும் உம்மை நினைந்து நாங்கள் வாழ்கின்றோம். எங்கள் உடல் சிறையில் இருந்தாலும் உள்ளம் உம் திருவடியிலல்லவோ இருக்கும்? நாற்றெண்மருக்கு இடர் வந்தால் அதைப் போக்கி அருள்பவர் தேவரீர்தாமே? எந்தச் சமயத்தில் நாங்கள் துயருற்றாலும் அந்தச் சமயத்தில் எங்கள் துன்பத்தை நீக்கியருளும் தயாநிதியாகிய தேவரீர் இப்போது இவ்வளவு தாமதம் செய்வதற்குக் காரணம் என்ன?" என்று அவர் செய்யுளால் முறையிட்டார்.

தினந்தோறும் தென்திருப்பேரைத் திருக்கோயிலில் மறை முழக்கும் தமிழ் முழக்கும் செவியாரப் பருகிய அவருக்குச் சிறைக்கூடத்திலுள்ள கொசுவின் ஒலியும், அதிகாரிகளின் அதட்டற்குரலும், காவற் பட்டார் வருந்தி அழுங்குரலும் மிக்க மன வருத்தத்தை உண்டாக்கின. "இசை நான்மறையின் சங்கமுங் கீதத் தமிழ்ப்பாடலுஞ் சத்த சாகரம்போற், பொங்குதென் பேரைப் புனிதா" என்று அவற்றை நினைந்து உருகினர்.

அவருக்கு ஒரு குழந்தை இருந்தது. தாம் குழைக்காதர் தரிசனத்துக்குப் போகும்போது சிலமுறை அக்குழந்தையையும் உடன் அழைத்துச் செல்வது வழக்கம். அவருக்கு அப்போது அக்குழந்தையின் ஞாபகம் வந்து துன்புறுத்தியது. "தேவரீரைக் குழந்தையோடு வந்து மீண்டும் தொழுவது எந்நாள்!" "நின்னை யெந்நாள், கொஞ்சுங் குழந்தையுங் கூடத் தொழுவது" (9.) என்று புலம்பினர்.

ஒவ்வொருநாளும் இங்ஙனம் கதறிய அவருடைய நெஞ்சம் கலங்கியது. "பித்தனைப் போன்மன மேங்காம லிந்தப் பிணியுடலை, எத்தனை நாட்செல்லு மோவறியேன்", "எண்ணாத வெண்ணி யிடைந்திடைந் தேங்கியிருந்துமனம், புண்ணாய் மெலிந்து புலம்

பாமணீயிப் புலைதவிர்ப்பாய்'' என அழுதனர். இவ்வாறு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுகத்தைப்போலப் போய்க்கொண்டிருந்தது. ஒருமாத காலம் ஆயிற்று. "இந்த ஒரு மாதமாக நாங்கள் கதறுகிறோமே. எங்களுடைய சிறையை அகற்றுவிக்க வில்லையே!'' என்று ஏங்கித் துடித்தார்:

"திங்களொன் றாகச் சிறையிருந் தோமிச் சிறையகற்றி
எங்கடம் பாலிரங் காததென் னே" (21)

'திருப்பேரை மாதவன் நாமஞ் சொன்னால் கவலையும் துன்பமும் தீரும்' (17) என்ற உறுதியான நம்பிக்கை அவருக்கு இருந்தது. "இன்றைக்கு நமக்கு அனுகூலம் உண்டாகும்; நாளைக்குள் எப்படியேனும் குழைக்காதர் திருவருள் புரிவார்'' என்று அவருடைய ஏங்கிப்போன நெஞ்சம் நினைந்து ஆவலுற்று நின்றது. ஒன்றும் எதிர்பார்த்தபடி நடைபெறவில்லை.

"இன்றாகும் நாளைக்கு நன்றாகு மென்றிங் கிருப்பதல்லால்
ஒன்றா கிலும்வழி காண்கில மேயுன் னுதவியுண்டேல்
பொன்றாம லெங்கள் பிழைப்போங் கருணை புரிந்தளிப்பாய்
அன்றா ரணந்தொழ நின்றாய்தென் பேரைக் கதிபதியே''

என்று பாடினார்.

இங்ஙனம் தம்முடைய குலதெய்வத்தை நினைந்து நினைந்து நைந்து உருகி அழுது புலம்பிய புலவர் "இனி என் செய்வது!" என்ற ஏக்கத்தை அடைந்தார். பிறகு தம்மை இந்த நிலைக்குக் கொணர்வதற்குக் காரணமான அதிகாரிக்குத் தம்மை விடுவிக்கும்படி யார் கூறுவார்களென்று ஆலோசித்தார். அவருக்கு மேல் அதிகாரியும் திருநெல்வேலிச் சீமைக்குத் தலைவருமாகிய வடமலையப்பப்பிள்ளையன் தமிழ்வாணர்களிடத்திற் பேரபிமானம் உடையவரென்பதை அவர் அறிந்திருந்தார். அவருடைய சிறந்த இயல்புகளையும் தமிழன்பையும் பற்றிப் பலர் கூறிப் புகழ்வதையும் கேட்டிருந்தார். "நாமும் தமிழ்ப்புலமையுடையோமென்பதை அவர் அறிந்தால் ஏதாவது அநுகூலமுண்டாகுமே. ஆனால் நம்முடைய தகுதியைப் பிள்ளையனுக்கு யார் அறிவிப்பார்கள்!'' என்று நினைந்தார்.

"வள்வார் முரசதிர் கோமான் வடமலை யப்பன்முன்னே
விள்வாரு மில்லை யினியெங்கள் காரியம் வெண்டயிர்பாற்
கள்வா வருட்கடைக் கண்பார் கருணைக் களிறழைத்த
புள்வாக னவன்பர் வாழ்வேதென் பேரைப் புராதனனே"

என்னும் செய்யுளுருவத்தில் அவருடைய கருத்து வெளிப்பட்டது.

நாள்தோறும் குழைக்காதரைப் பாடிப் புலம்புவதும் முன் பாடிய செய்யுட்களை மீட்டும் மீட்டும் பாடுவதும் சிறைப்பட்ட அன்பர்களின் வழக்கமாக இருந்தது. ஒருநாள் தீக்ஷிதர், "வள்வார் முரசதிர்" என்னும் செய்யுளைக் கூறி அரற்றியபோது அந்தச் சிறைக்காவலாளியின் காதில் பட்டது. அச்செய்யுளில் தன்னுடைய தலைவர் பெயர் வருவதை அவன் கவனித்தான். அவன் சிறிது தமிழறிவு உடையவன்; "நம்முடைய எசமான் பெயர் இந்தப் பாட்டில் அமைந்திருக்கிறதே; உள்ளே இருப்பவர்கள் தமிழ் வித்துவான்களென்று தோற்றுகின்றது" என்று அவன் எண்ணினான். பிள்ளையன் தமிழ்ப் புலவர்களைப் பாதுகாக்கும் செயலை முதற் கடமையாகக் கொண்டவரென்பதை அவன் அறிவான் ஆதலின் இத்தகைய புலவர் சிறையில் வாடிக் கிடப்பதை நேரே அவருக்கு அறிவிப்பதே நலம் என்று துணிந்தான். அன்றியும் சிறையில் அவர்களை இட்ட அதிகாரியின் கொடுமை எல்லோரிடத்திலும் வியாபித்திருந்தது. அவர்பால் யாவருக்குமே வெறுப்பு இருந்தது. நாள்தோறும் நாராயண தீக்ஷிதரும் பிறரும் பெருமாளைத் துதித்து உருகுவதை அக்காவலாளி கவனித்து வந்தவன். அவனுடைய நெஞ்சம் இளகிற்று. 'இவர்களை விடுதலை செய்யும் அதிகாரம் நமக்கில்லையே' என்ற கவலையும் அவனுக்கு உண்டாயிற்று.

இங்ஙனம் இருக்குங்கால் தன்னுடைய தலைவருடைய பெயர் பாட்டில் வரவே, "இந்தச் செய்தியை முன்னிட்டுக்கொண்டு பிள்ளையனிடம் இவர்களுடைய நிலையைச் சொல்லுவோம்" என்று அவன் எண்ணினான். உடனே வடமலையப்பப் பிள்ளையனிடம் சென்று சிறையிலுள்ளவர்கள் நாள்தோறும் தமிழ்ச்செய்யுட்கள் பாடுவதையும், அத்தலைவருடைய விஷயமாகச் செய்யுள் கூறுவதையும் எடுத்துரைத்தான்.

தண்டமிழ்வாணர் துயரத்தைக் கேட்கப்பொறாத வடமலையப்பப் பிள்ளையன் இதனைக் கேட்டவுடன் எல்லாக்காரியங்களையும் விட்டுக் குதிரையின்மீ தேறிக்கொண்டார்; சிறைக் கூடத்தை நோக்கி விரைந்து வரலானார்.

சிறிது நேரத்திற்குள் குதிரை சிறை வாயிலில் வந்துநின்றது. சிறைக் கூடத்தைத் திறக்கும்படி பிள்ளையன் உத்தரவிட்டு உட்புகுந்தார். அப்பொழுதும் நாராயண தீக்ஷிதரும் அவருடன் இருந்தவர்களும் குழைக்காதரை நினைந்து கண்ணுங் கண்ணீருமாய் இருந்தனர். தீக்ஷிதர், "முன்பெல்லாம் எந்த வேளையிலும் எங்கள் துயரத்தை உடனுக்குடன் தீர்த்து நாங்கள் அஞ்சாமற் பாதுகாத்

தீரே; இப்போது இதுகாறும் படாத துன்பத்தை நாங்கள் படுகின்றோம். தேவரீர் இரக்கம் கொள்ளாத காரணம் யாதோ!'' என்று கூறி அக்கருத்தை யமைத்து,

''அக்கணஞ் சாதெந்த வேளையென் றூலு மளித்தனை நீ
இக்கணஞ் சால வருந்துமெம் பாலிரங் காததென்னே
மைக்கணஞ் சாயன் மடமாதுக் காக வளர்மதிலை
முக்கணன் சாப மிறுத்தாய்தென் பேரை முகில்வண்ணனே.''

என்று பாடினார்.

அவருடைய நிலையும் அவர்பாடிய செய்யுளும் பிள்ளையனுடைய உள்ளத்தை உருக்கின; 'இவர் தமிழ்ப்புலமையோடு எம்பெருமானிடத்தில் இணையற்ற பக்தியும் உடையவரென்று தோற்றுகின்றது. இத்தகைய பெரியாரும் இவரைச் சேர்ந்த அன்பர்களும் படும் துயரத்தை இதுகாறும் நாம் அறிந்திலமே! இவர்கள் எவ்வளவு நாட்களாக இவவாறு கஷ்டபபட்டுக் கொண்டிருக்கிறார்களோ! நம்முடைய ஆட்சியில் இத்தகைய கொடுமை நடைபெறும்படி நாம் இடங்கொடுத்தது பெரும் பிழையன்றோ?'' என்று நெஞ்சந் துணுக்குற்றார். தீக்ஷிதரது வாய்மொழியால் அவர்களுடைய வரலாற்றையும் அதிகாரியின் கொடுமையையும் உணர்நதார்.

பிள்ளையன் கட்டளையினால் பல வண்டிகள் சிறைவாயிலில் வந்து நின்றன. நாராயண தீக்ஷிதரும் அவருடன் இருநதவர்களும் அவற்றில் ஏறிக்கொண்டனர். பிள்ளையன அவர்களைத் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். தக்க உபசாரங்கள் செய்தார்; அவர்கள் கொடுக்கவேண்டிய வரியை நீக்கினார்; தீக்ஷிதருடைய நிலங்களை என்றும் வரியில்லாத இறையிலி நிலஙகளாகச் செய்துவிட்டார்.

அப்பால், 'இத்தகைய சாதுக்களைச் சிறையிலிட்டு வருத்திய அதிகாரியை நமமுடைய ஆட்சியின கீழ் வைத்திருநதால் மீதலுக்கு மணியம கொடுத்தது போலாகும். இன்னும பல கொடுமைகளைப் புரிந்து நம் தலையிற் பாவ மூட்டையை ஏற்றிவிடுவான்' என்று எண்ணி அவனை வேலையினின்றும் நீக்கிவிட்டார்.

தீக்ஷிதரிடம் அவர் பாடிய செய்யுட்களைப் பிள்ளையன் கேட்டார். அவை தீக்ஷிதருடைய உள்ளக்கருத்தைத் தெளிவாகக் காட்டின. ஒவ்வொரு செய்யுளும் அவர் சிறையிலிருந்தபோது

பட்ட வேதனையைக் குறிப்பித்தது. அவற்றைக் கேட்கக் கேட்கப் பிள்ளையினுடைய உள்ளம் மறுகியது. அதுகாறும் 65 பாடல்களைத் தீக்ஷிதர் பாடியிருந்தார். அவர் மனம் வருந்திப் பாடிய பாடல்களைக் கேட்ட பிள்ளையன் அவர் மனமகிழ்ந்துபாடும் செய்யுட்களையும் கேட்டால்தான் தம் மனம் ஆறுதலடையுமென்று உணர்ந்தார். ஆதலின் அவர் தீக்ஷிதரை நோக்கி, "நீங்கள் முதலில் நூறு செய்யுட்கள் பாடுவதாக ஸங்கற்பம் செய்திருக்கிறீர்கள். அந்த ஸங்கற்பத்தை நிறைவேற்ற வேண்டும். குழைக்காதர் அருள் செய்யவில்லையென்று வருந்திப்பாடிய இந்த 65 செய்யுட்களும் கேட்போர் மனத்தை உருக்குகின்றன. அவை உங்களுடைய தமிழ் அறிவையும், குழைக்காதர்பால் உள்ள பேரன்பையும் விளக்குகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக என்னுடைய அபராதத்தை வெளிப்படுத்தும் அடையாளமாக இருக்கின்றன. அப்படியே விட்டுவிட்டால் உங்கள் ஸங்கற்பமும் அரைகுறையாகவே இருக்கும்; எனக்கு வந்த பழியும் மாறாது. அவற்றை நீக்க மேலே 35 செய்யுட்களையும் பாடி நிறைவேற்றவேண்டும்" என்று வேண்டிக்கொண்டார்.

அப்படியே தீக்ஷிதர் பாடத் தொடங்கும்போது, பிள்ளையன், "மற்றொரு விண்ணப்பம்: உங்களுடைய நிலையை இதுகாறும் அறிந்து கொள்ளாமல் இருந்த பெரும் பிழையைச் செய்தவன் நான். குழைக்காதரே உங்கள் நிலை எனக்குத் தெரியும்வண்ணம் செய்தார். நான் அதற்குக் காரணமாக நிற்கவில்லை. இந்த அபசாரத்தைச் செய்ய வொட்டாமல் தடுக்கும் கடமையை மறந்த குற்றந்தான் நான் செய்தேன். அக்குற்றம் நீட்டிக்காமல் செய்தவர் குழைக்காதர். ஆதலால் இனிப் பாடும் பாடல்களில் என்னைப் போற்றிக் கூறுதல் வேண்டாம்" என்று இரந்தனர். நன்றியறிவு மிக்க தீக்ஷிதருடைய மனத்துக்கு அவ்வேண்டுகோள் துன்பத்தை அளித்தது. ஆயினும் பிள்ளையன் தம் கருத்தை வற்புறுத்தவே, அங்ஙனமே செய்ய உடம்பட்டு மேலே முப்பத்தைந்து செய்யுட்களையும் ஒருவாழ்த்துப் பாடலையும் பாடி பிரபந்தத்தை முடித்தார்.

இங்ஙனம், விடுதலைப் பெற்ற பின்னர்ப் பாடிய பகுதியில் குழைக்காதரருளால் தாம் துன்பம் நீங்கியதையும், தம்மைத் துன்புறுத்திய கொடியவர் உத்தியோகத்தினின்று விலக்கப்பட்டு ஓடியதையும் பலவிடங்களிற் குறிப்பித்துள்ளார். முதற் பாட்டிலேயே,

"ஆடகச் சேவடி யாலெம தாவி யளித்தனைகார்க்
கோடகப் பாவிகள்* வாராமற் காத்தனை"

என்று பாடினார்.

"இடைந்தோ ரிருப்பிட மில்லாத வஞ்சக னேங்கிமனம்
உடைந்தோட நோக்கி யெமைக்காத்தனை"

என்றும்,

"அருங்கொடிக் கோர்கொழு கொம்பென வெம்மை
யளிப்பதுஞ்செய்
திருங்கொடி யோனையு மாற்றிவிட்டாய்"

என்றும் தம்மைத் துன்புறுத்திய அதிகாரி பட்ட தண்டனையைக் குறிக்கின்றார்.

இறுதிப் பாட்டில், "சொற்சுவை பொருட் சுவை அமையப் பாடும் பயிற்சியில்லே னெனினும் தேவரீர் வியந்து அருள்செய்தீர்" என்று துதிசெய்தார்.

பாமாலை முழுவதையும் ஆராய்ந்தால் நாராயண தீக்ஷிதர் குழைக்காதர்பாற்கொண்ட அன்பும், தென்திருப்பேரைத் தலத்தில் வைத்த அபிமானமும், நம்மாழ்வார்பாற் கொண்ட பக்தியும், தம்மைச் சிறையிட்ட அதிகாரியின்பால் அடைந்த வெறுப்பும் புலப்படும்.

'குழைக்காத, மகரக்குழைக் கொண்டலே, மகரக்குழையாய்' என்று எம்பெருமானை விளித்து ஆசிரியர் பாடுகின்றார். கிருஷ்ணாவதாரத்திலும், இராமாவதாரத்திலும் அவருக்கு ஈடுபாடு அதிகமென்று தெரிகின்றது.

"வழுதி வளநாட" (96) என்று பாண்டி நாட்டையும்,
"எந்தாய் பொருநைத் துறைவா" (30)
"தெண்டிரைநீர், எறியும் பொருநைத் துறைவா" (39)
"எறிநீர்ப் பொருநைத், துறையவன்" (64)
"வேரிமடற், பொதிபானை மீற நெடுவாளை யாளைப் பொருதுவரால்
குதிபாய் பொருநைக் கதிபா" (71) என்று தாம்பிரபர்ணி நதியையும் பாராட்டுகின்றார்.

"நன்னயஞ் சேருந் தமிழ்ப்பேரை" (7)

"பண்ணார் மதுரத் தமிழ்ப்பா வலரும் பழமறையும்
விண்ணோ டருந்தொழு மெந்தாய்தென் பேரையில் வித்தகனே" (19)

* பாவிகளென்றது அதிகாரியையும் அவரைச் சார்ந்தவர்களையும்.

"நான் மறையின், சங்கமுங் கீதத் தமிழ்ப் பாடலுஞ் சத்தசாகரம் போற், பொங்கு தென் பேரை" (21)

"தடங்காத் திகழுந் தமிழ்ப் பேரை" (33) "தமிழ்ப்பேரை" (60,88) தண்டமிழ்ப் பேரை" (76,83)

என்று தென்திருப்பேரையில் வடமொழியும் தென்மொழியும் சிறப்பான நிலையிலிருந்ததைக் குறிப்பிக்கின்றார். தம் இனத்தாராகிய தலைவகார சாமவேதிகள் நாற்றெண்மரை,

"நாற்றெண் மருக்கிடர் வந்தாலு மவ்விடர் நோயகற்றி மாற்றும் பரஞ்சுடர் நீயல்லவோ" (3) என்றும்,

"நாற்றெண்மர் போற்றும் பிரான்" (91) என்றும்,

"மறை, பாராய ணம்பயி னாற்றெண்மர் நாளும் பரிந்துதொழும் நாராயணன்" (99) என்றும்,

"நாற்றெண்மர் நீடூழி வாழி" (வாழ்த்து) என்றும் பாராட்டுகின்றார்.

"கடியே றிலஞ்சித் தொடைஞான முத்திரை கைத்தலனே" (காப்பு)
"நிறைந்ததமிழ்ப் பாயிரமாறன் கவிகேட் டுருகும் பரம" (13)

"குருகூரன் விரித்ததமிழ்ப் பண்ணுக் கிரங்கும் பரமா" (46)
"மாறன் பனுவலியற் சீர்வாழி" (வாழ்த்து)

என்பவற்றில் நம்மாழ்வாரையும் அவருடைய அருளிச்செயல்களையும் புகழ்கின்றார்.

தம்மைச் சிறையில் வைத்த அதிகாரியை,

"கண்டோ மிலைமுனங் கேட்டோ மிலையவன் கைப்பொருளால் உண்டோ மிலையிவ் வினைவரக் காரணம் ஒன்றுளதோ" (26)

"உரகதங் கொண்ட கொடியோன்" (29), "விடனடவாது கருமஞ் செய்தான்" (36), "சத்துரு" (47), "இரும்பான கன்னெஞ்ச வஞ்சகனொர்க்கு மிடர்விளைப்போன்" (48), "ஆலமென் னேருருக் கொண்டான்" (51), "நிம்ப வளக்கனி போற்கசப் பாகிய நீசன்" (53), "முன்னம் பழகி யறியோ மவனை முகமறியோம்" (56), "ஆக நகைக்கும் படி திரிவோன்" (57), "பொய்யா னிறைந்த கொடியவெம் பாதகன்" (58), "இகலிட மான புலையன்" (59), "கலகக் கொடிய புலையன்" (61), "கைச்ச கடைத்தொழில் கொண்டே திரியுங் கபடன்" (61), "மரியாதை யறியாத வஞ்சன்" (69), "வஞ்சகன்" (74), "இருங் கொடியோன்" (92), "கழகா ரணத்தின் பயனறி யாத கபடனெம்மைப் பழகாத வஞ்சன்" (96)

என்று குறிக்கும் பகுதிகளிலிருந்து அவனை அவர் எங்ஙனம் வெறுத்தாரென்பது புலப்படுகின்றது.

தாம் குழைக்காதர் அருளால் விடுதலைபெற்ற செய்தியை ஒரு செய்யுளில்,

"வஞ்ச னதட்டவெமைப்
பொராமரா ணுதிகள் வாராமற் காத்தனை" (69)

என்று கூறுகின்றார். இதனால் தமக்கு ஏதேனும் உய்தி கிடையாவிடின் உயிர் விடவும் அவர் துணிந்திருந்தாரென்று தெரிகின்றது.

நாராயண தீக்ஷிதர் சிறையில் இருந்த காலத்தில் உடன் இருந்தவர்கள் பாடிய செய்யுட்களிற் சில வருமாறு:—

(வெண்பா)

1 கன்றும் பசுவுங் கதறுமற் காத்துநெடுங்
குன்றைக் கவித்த குழைக்காதா—இன்றுமுதல்
நாளைக்கு ளெங்களுக்கு நன்மையுறக் காத்தருளிவ்
வேளைக் கிரங்குவதே மெய்.

2. இந்தவினை நீக்கி 1 யிரங்கிக் கடைக்கண்பார்
கொந்தவிழுந் தாமக் குழைக்காதா—2இந்துமுக
மண்டலத்தாய் நாற்றெண்மர் வாழ்வே மணிமகர
3குண்டலத்தா யெங்களையாட் கொண்டு.

(பிரதி பேதம்.) 1. 'யிரங்கிக்கண் பாரையா' 2. 'சந்த்ரமுக'
3. 'குண்டலத்தா யாயர்கோவே.'

3. தென்றிருப்பே ரைப்பதிக்குத் தீங்கொன்றும் வாராமல்
உன்றிருப்பே ரைப்பலகா லோதினேன்—மன்றிருப்பேர்
ஆயிரம் பெற்ற வழகா குழைக்காதா
நீயிரங்கிக் காப்பாய் நிதம்.

4. நெல்லைதனில் வந்த நெடும்பா தகன்விளைத்த
அல்ல றவிர்த்தெம்மை யாண்டருள்வாய்—நல்லோர்கள்
போற்றுந் திருப்பேரைப் புங்கவா வெவ்வினையும்
மாற்றும் படிக்கருள்செய் வாய்.

5. உற்றசம யத்தி லுதவுந் திருப்பேரைக்
கொற்றவா செம்பொற் குழைக்காதா முற்றுமெமைக்
காத்திரட் சிப்பாய் கலங்காம லெவ்வினையும்
தீர்த்திரட் சிப்பாய் தினம்.

6. நம்பினேந் தென்பேரை நாதகுழைக் காதநின்பொற்
செம்பதுமம் போலுந் திருப்பதத்தை—எம்பெருமான்
எங்கள்பா லோர்தீங்கு மெய்திடா வண்ணமளித்
தங்கணுல கிற்காத் தருள்.

(கட்டளைக்கலித்துறை)

7. தென்பேரை வாழுங் குழைக்காத நின்பொற் றிருவடிக்கீழ்ப்
புன்பே யனைய தமியன்வின் ணப்பமெய்ப் போதந்தந்து
வன்பே யிடர்தவிர்த் தென்னொன்று மிக்கால் வாழ்வருளி
உன்பே ரருட்குரித் தாகவைத் தாண்டரு ளுத்தமனே.

நாராயண தீக்ஷிதர் குழைக்காதர் பாமாலையைப் பாடிய செய்தியை ஸ்ரீராமபாவல ரென்பவர் தாம் பாடிய சந்தானப்பத்தில்,

"பாகார்ந்த செந்தமிழ்ப் பாமாலை பாடிய பாவலர்க்குப்
போகாத வல்வினை போக்குவித் தாயிந்தப் பூதலத்தில்
வாகார் மகரக் குழையா யடியன் மனமகிழச்
சாகாத சந்ததி தந்தருள் பேரைத் தயாநிதியே"

என்னும் செய்யுளிற் குறித்திருக்கின்றார்.

பாமாலை பாடியபின் நாராயண தீக்ஷதரும் பிறரும் வடமலையப்பப் பிள்ளையனிடம் விடை பெற்றுக்கொண்டு தென்திருப்பேரைக்குப் போய் மகரநெடுங்குழைக்காதரைச் சேவித்து இன்புற்று வாழ்ந்து வந்தனர்.

நாராயண தீக்ஷிதருடைய இறுதிக்கால நிகழ்ச்சியென்று பின்வரும் செய்தியொன்று கர்ணபரம்பரையாக வழங்கி வருகின்றது:

தீக்ஷிதர் நாள்தோறும் காலையில் குழைக்காதரைத் தரிசனம் செய்துவிட்டு அப்படியே ஆழ்வார் திருநகரி சென்று நம்மாழ்வாரையும் தரிசித்து வருவார். அங்குள்ள பட்டாசாரியாருக்குத் தக்க பொருளுதவி செய்து தாம் வருவதற்குச் சிறிது நேரமானாலும் காத்திருக்கும்படி சொல்லி யிருந்தார். அங்ஙனமே பட்டாசாரியர் செய்துவந்தார். ஒருநாள் பூஜை முதலியன ஆனபிறகு பட்டாசாரியர் தீக்ஷிதர் வரவுக்காகக் காத்திருந்தார். வழக்கம்போல வரும் நேரத்தில் அவர் வரவில்லை. அப்போது அங்கே வந்த ஒருவரிடம் பேசிக்கொண்டிருந்தபோது தீக்ஷிதர் உள்ளே சென்றதாகத் தெரிந்தது. உடனே பட்டாசாரியர் தம்முடன் பேசிக்கொண்டிருந்தவரிடம், 'உள்ளே தீக்ஷிதர் போயிருக்கிறார். பிரஸாதம் கொடுத்துவிட்டு வருகிறேன்' என்று சொல்லி உள்ளே சென்றார். தீக்ஷிதரை அங்கே காணவில்லை. பிறகு கோயில் முழுவதும் தேடியும் காணவில்லை. அப்பால் விசாரித்ததில் அன்றுதான் தீக்ஷிதர் பரமபதமடைந்தாரென்பதை அறிந்து வியப்படைந்தார். அவர் நம்மாழ்

வாரோடு ஐக்கியமாயினர் என்றே கருதி இவ்வற்புதத்தை யாவருக்கும் தெரிவித்தனர்.''

பாமாலை எளிய நடையில் பக்திச்சுவை செறிந்ததாக விளங்குகின்றது. தென்திருப்பேரை முதலிய இடங்களிலுள்ளோர் இதனைப் பக்தியுடன் பாராயணம் செய்துவருகின்றனர். அங்ஙனம் செய்வதனால் சில துன்பங்கள் நீங்கி இன்பம் உண்டாவதாகக் கூறுவர். திருப்பதியாத்திரை, சேதுயாத்திரைகளில் இதனை நாள்தோறும் பாராயணம் செய்வார்களாம்.

நான் கும்பகோணம் காலேஜில் இருந்தபோது தென்திருப்பேரைக் கிராமமுன்ஸீபின் குமாரராகிய ஸ்ரீநிவாஸையங்கா ரென்பவர் படித்துவந்தார். அவர் மிக்க செல்வர். அவருடைய பரிசாரகராகிய நாராயணையங்காரென்பவர் ஒருநாள் வழக்கம் போல் இரண்டாம் வேளை உணவுகொண்டுவந்து அவருக்காகக் காத்திருந்தார். அப்போது அவர் தம் கையில் ஒரு புத்தகத்தை வைத்துக்கொண்டு மிகவும் கவனமாகப் படித்துக்கொண்டிருந்தார். அவ்வளவு கவனத்தோடு அவர் படிப்பதைப் பார்த்து ஏதாவது கதைப்புத்தகமாக இருக்கலாமென்று எண்ணினேன்; ''என்ன புத்தகம்?'' என்று கேட்டேன். அவர் ''குழைக்காதர் பாமாலை; மிகவும் சிறந்த புத்தகம்; தெய்விக சக்தியுடையது'' என்றார். அதிலிருந்து சில பாடல்களைச் சொல்லச் செய்து கேட்டேன். அவர் சொல்லிவிட்டு இந்நூல் உண்டான வரலாற்றையும் கூறினார். அந்த வரலாற்றைக் கேட்கும்போது என் உள்ளம் உருகியது. அக்காலத்திலேயே இப் பாமாலையை ஒருவர் அச்சிட்டிருந்தார். அவ்வச்சுப் பிரதியொன்றை அவர் எனக்கு அளித்தார். அது திருத்தமாக இல்லாமையால் நான் விரும்பியபடியே பிறகு இப் புத்தகத்தின் ஏட்டுப்பிரதிகள் சிலவற்றையும் வருவித்தளித்தார். அவற்றைக்கொண்டு என்னிடம் உள்ள அச்சுப்பிரதியிலே திருத்தம் செய்துகொண்டேன்.

சில வருஷங்களுக்குமுன் இப்பாமாலை சம்பந்தமாக, என்னுடைய அன்பரும் பல தமிழ்ப் பிரபந்தங்களை இயற்றியவரும் ஆசுகவியும் வானமாமலைமடம் ஆஸ்தான வித்துவானுமாகிய தென் திருப்பேரை அபிநவகாளமேகம் ஸ்ரீமத் அனந்தகிருஷ்ணையங்கா ரவர்களுக்குக் கடிதம் எழுதி விசாரித்தேன். அவர்கள் பல செய்திகளைத் தெரிவித்ததோடு பாமாலையைக் காகிதத்திற் பிரதி

பண்ணுவித்தும் அனுப்பினார்கள். நான் முன்பு கேள்வியுற்றிருந்த செய்திகளையும், அவர்கள் அன்புகூர்ந்து அறிவித்த செய்திகளையும், இந்தப் பிரபந்தத்திற் காணப்படும் குறிப்புக்களையும் ஆதாரமாகக் கொண்டு இவ்வரலாறு முதலியன எழுதப்பெற்றன.

இதனை ஆராயுங்காலத்தும் பதிப்பிக்குங் காலத்தும் உதவி செய்தவர்கள் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப் பண்டிதர் சிரஞ்சீவி வித்துவான் வி. மு. சுப்பிரமணி ஐயரும், சிரஞ்சீவி வித்துவான் கி. வா. ஜகந்நாதையரும் ஆவர்.

இதனைத் தம் "கலைமகள்" பத்திரிகையில் வெளியிடுவித்த ஸ்ரீமான் ரா. நாராயணசாமி ஐயரவர்களுக்கு என் நன்றியறிவைச் செலுத்துகின்றேன்.

'தியாகராஜ விலாஸம்'
13—5—'39

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

உ

பரமபதி துணை

## தென்திருப்பேரை

# மகரநெடுங் குழைக்காதர் பாமாலை

### காப்பு

நம்மாழ்வார்

கட்டளைக்கலித்துறை

1. அடியேங்க ளின்ப மகல்வதற் காவந்த நான்மறையின்
முடியே பரவுங் குழைக்காதர் மீது முதுதமிழாற்
படியேழு மோங்கிய பாமாலை யீரைம் பதுமளிப்பான்
கடியே றிலஞ்சித் தொடைஞான முத்திரைக் கைத்தலனே.

பெரிய திருவடிகள்

2. பொன்சிறை நீக்கி விரித்தே பறக்கின்ற புள்ளரசே
என்சிறை நீக்குவித் தாயில்லை யேயிக லாடரவ
வன்சிறை நீக்கினை வானவர்க் காக மகிழ்வினதை
தன்சிறை நீக்கினை யாரா வமுதமுந் தந்தனையே.

### நூல்

1. கன்றுக் கிரங்கிய கற்றாவைப் போலக் கருணையுடன்
என்றைக் கிரங்குவ ரோவறி யேனெழு பாருமுய்யக்
குன்றைக் கவிகை யெனத்தரித் தோர்குழைக் காதரைநாம்
சென்றெப் பொழுது தொழுவதும் பாவங்க டீர்வதுமே.

---

குறிப்புரை

**காப்பு.** 1. நான்மறையின்முடி - உபநிடதம். குழைக்காதர் - தென் திருப்பேரையில் எழுந்தருளியுள்ள எம்பெருமானாகிய மகரநெடுங் குழைக்காதர். (பி-ம்.) 'குழைக்காதர் பேரில்' படி-பூமி. கடி-நறுமணம். இலஞ்சித் தொடை - மகிழம்பூமாலை. ஞானமுத்திரைக் கைத்தலன்- நம்மாழ்வார்.

2. பொன்சிறை-பொன்னிறமுள்ள சிறை. வினதை-கருடனுக்குத்

**நூல்.** 1. கற்றா-கன்றையுடைய பசு. குன்றை-கோவர்த்தன கிரியை கவிகையென-குடையைப் போல. தரித்தோர்-தாங்கினோர்.

2. எப்போது நின்னை நினைப்போமங் கேவந் தெதிர்முகமாய்
அப்போது நீயும்வந் தஞ்சலென் பாயடி யாருளத்தில்
மெய்ப்போத ஞான விளக்கே கராங்கெளவ வீரிட்டந்தக்
கைப்போத கஞ்சொன்ன மாலேதென் பேரையிற் காகுத்தனே.

3. நூற்றெண் மருக்கிடர் வந்தாலு மவ்விடர் நோயகற்றி
மாற்றும் பரஞ்சுடர் நீயல்ல வோதமிழ் வாணர்தினம்
போற்றுஞ் சுருதிப் பொருளே மதுரம் பொழிந்துநறை
ஊற்றுந் துவளப் புயத்தாய்தென் பேரையி னுத்தமனே.

4. உத்தம னேத்தமிழ்ப் பேரையம் மானையன் புற்றவர்க்கு
நித்த மனத்தந் தவிர்க்குஞ்செஞ் சோதியை நீண்டசுடர்
அத்த மனம்பட வாழிதொட் டானை யனுதினமும்
தத்த மனத்து ணினைப்பார்க் கொருதுயர் தானிலையே.

5. எங்கெந்த வேளை யினுமலங் காம லிருசரணம்
தந்தந்த கார வினைதவிர்ப் பாயிந்தத் தாமதமென்
உன்றன் றிருவடிக் காளான வெங்கட் குவகைநல்காய்
கொந்துந்து தாமப் புயனே மகரக் குழைக்கொண்டலே.

6. பூரண சந்த்ர முகமுங்கத் தூரியும் பொற்புயமும்
ஆரணந் தேடுநின் பாதாம் புயமு மபயமென்றே
வாரணங் காத்த கரபுண்ட ரீகமும் வந்துதொழாக்
காரண மேதென் றறியேன்றென் பேரையிற் காகுத்தனே.

---

2. மெய்ப்போதம்-உண்மையறிவு. கராம்-முதலை. கைப்போதகம்-கஜேந்திரன்.

3. நூற்றெண்மர்-தென்றிருப்பேரையிலுள்ள தலவகார சாமவேதிகளாகிய ஸ்ரீவைஷ்ணவர்கள் நூற்றெண்மர். நறை - தேன். (பி-ம்.) 'மதுரம் பு[illegible] நறவூற்றுந்'

4. [illegible]த்தம்-துன்பம். சுடர்-சூரியனை. கண்ணபிரான் பாரத யுத்தத்தில் சக்கரப்படையாற் சூரியனை மறைத்த வரலாற்றை இங்கே குறிப்பித்தார். அனுதினமும்-தினந்தோறும்.

5. மலங்காமல்-மயங்காமல். கொந்து-பூங்கொத்து.

6. கத்தூரி-கத்தூரித் திலகம். ஆரணம்-வேதம். வாரணம்-கஜேந்திரன்.

7. அன்னையல் லாமன் மகவுக்கு வேறில்லை யாதுலர்க்குப்
பொன்னையல் லாமற் புகல்வே றிலையிப் புலைதவிர்க்க
நின்னையல் லாமன்மற் றுரையுங் காண்கில னீதியுடன்
நன்னயஞ் சேருந் தமிழ்ப்பேரை வாழ்கின்ற நாரணனே.

8. பொல்லாத வஞ்சனை வாராமற் போக்கினை போக்கினதும்
அல்லாம லெங்கட் கபயமென் றுயடி யேங்கள்வினை
எல்லா மகற்றிநின் சந்நிதிக் கேவர ரட்சிகண்டாய்
நல்லார் தொழுந்தென் றிருப்பேரை வாழ்கின்ற நாரணனே.

9. வஞ்சம் புணர்ந்த கொடுவினை யாவையு மாற்றியெங்கள்
நெஞ்சங் கலங்கி யழியாமற் காத்தரு ணின்னையெந்நாள்
கொஞ்சுங் குழந்தையுங் கூடத் தொழுவது கோவியர்பால்
துஞ்சுந் தயிருண்ட மாலேதென் பேரையிற் றூயவனே.

10. காவா வெனப்பல தேவரை வாழ்த்திக் கவலையுடன்
நாவா யுலர்ந்ததல் லாற்பய னெம்தம்மை நாடிவந்த
தாவா வினையைத் தவிர்ப்பா யினியுன் சரணங்கண்டாய்
தேவா திபர்தொழுந் தேவேதென் பேரையிற் சிதரனே.

11. பித்தனைப் போல்மன மேங்காம லிந்தப் பிணியகல
எத்தனை நாட்செல்லு மோவறி யேனிசை தேர்குருகை
முத்தனைப் போற்று மகிழ்மாறன் கூறு முகுந்தமலர்க்
கொத்தலர் பேரைக் கதிபா மகரக் குழைக்கொண்டலே.

12. அடியா ரிடத்தில் வினைகள்வந் தாலு மவையகற்றி
நொடியாகத் தீர்ப்பது நீயல வோமன் னுடங்குவஞ்சிக்
கொடியா ரிடைச்சியர் மத்தா லடிக்கக் குழைந்துநின்ற
வடிவா கருணைக் கடலேதென் பேரையின் மாதவனே.

---

7. மகவுக்குப் புகல் வேறில்லை யென்க. ஆதுலர்-வறிஞர். புலை-இழிந்த சிறை; "நீயிப் புலைதவிர்ப்பாய்" (19) என்பர் பின்னும்.

9. தொழுவது எந்நாளென்க. துஞ்சும்-உறியிலே தொங்கும்.

10. நாவும் வாயும் உலர்ந்ததல்லால். தாவா-கெடாத.

11. குருகை-ஆழ்வார் திருநகரி. முத்தன்-அத்திவ்ய தேசத்தில் எழுந்தருளியுள்ள ஆதிநாதப் பெருமாள். மகிழ்மாறன்-மகிழமாலையை அணிந்த நம்மாழ்வார். பேரை-தென்திருப்பேரை.

12. வினைகள்-பாவங்கள்.

13. ஆயிரங் கோடி வினைகள்வந் தாலு மவையகற்றி
நீயிரங் காவிடின் மற்றுரு மில்லை நிறைந்ததமிழ்ப்
பாயிர மாறன் கவிகேட் டிரங்கும் பரமவிசை
வேயிரங் குங்கனி வாயாதென் பேரையில் வித்தகனே.

14. அவலப் படாப்பழி வாராமற் காத்தடி யேங்கண்மனம்
கவலைப் படாமற் கடாட்சிகண் டாய்கற்ற நாவலரும்
நுவலப் படாவரை மத்தாக நாட்டி நுடங்குதிரைத்
திவலைங் கடலைக் கடைந்தாய்தென் பேரையிற் சீதரனே.

15. உனையா தரிக்கு மடியேங்கண் முன்செய்த வூழ்வினையால்
நினையாமல் வந்த நெடுந்துயர் தீர்த்தரு ணேமிசங்கம்
புனையா ரணப்பொரு ளேபல காலன்பு பூண்டவர்பால்
அனையா கியகுழைக் காதா வினியு னடைக்கலமே.

16. நெஞ்சினு நீயென் னினைவினு நீநெடும் பூதமெனும்
அஞ்சினு நீகலை யாறினு நீயறி வோடிருகண்
துஞ்சினு நீயன்றி வேறறி யேனித் துயர்தவிர்ப்பாய்
மஞ்சினு மேனி யழகா கருணை வரோதயனே.

17. வண்ணங் கரியன் கனிவாய் முகுந்தன் மலர்ப்பதமும்
கண்ணுங் கரமுங் கமலமொப் பானகஞ்ச மாமயிலை
நண்ணுங் கருணைத் திருப்பேரை மாதவ னுமஞ்சொன்னால்
எண்ணுங் கவலையுந் துன்பமுந் தீரு மெடீக்கினியே.

18. நிலையாக் கயத்துட் படிந்தவர் போலெங்க ணெஞ்சழிந்து
மலையாம லித்துயர் மாற்றுகண் டாய்மலர்ச் சேவடியாற்
சிலையா ரணங்கி னுருவாக்குந் தெய்வ சிகாமணியே
அலையாழி சூழுந் தமிழ்ப்பேரை வாழச்சு தானந்தனே.

---

13. ஆரும் இல்லை-இரங்குவார் யாரும் இல்லை. மாறன் கவி-திருவாய்மொழி முதலியன. இசைவேய் இரங்கும்-இசையை வெளியிடும் புல்லாங்குழல் ஒலிப்பதற்கு இடமாகும்.

14. அவலப்படல்-துன்புறல்.

15. ஆதரிக்கும்-அன்பு செய்யும். நேமி-சக்கராயுதம்.

16. கலை ஆறு-ஆறு சாத்திரங்கள். மஞ்சு-மேகம்.

17. கஞ்சமாமயிலை-திருமகளை.

18. கயம்-குளம். இத்துயரென்றது சிறையில் வாடுந் துயரத்தை. சிலை-கல்லை. அணங்கின் உரு-அகலிகையின் உருவம்.

19. எண்ணாத வெண்ணி யிடைந்திடைந் தேங்கி யிருந்துழனம்
புண்ணாய் மெலிந்து புலம்பாம னீயிப் புலைதவிர்ப்பாய்
பண்ணார் மதுரத் தமிழ்ப்பா வலரும் பழமறையும்
விண்ணாட ருந்தொழு மெந்தாய்தென் பேரையில் வித்தகனே.

20. இழைக்கும் கொடிய வினையா வையுமாற்றி யெங்களுயிர்
பிழைக்கும் படிக்கருள் செய்தனை யேசுவை பெற்றபசுங்
கழைக்கண்டு செஞ்சொல் வசுதேவி கண்டிரு கண்களிக்கும்
மழைக்கொண்டலேயண்டர்வாழ்வேதென்பேரைமணிவண்ணனே

21. திங்களொன் றாகச் சிறையிருந் தோமிச் சிறையகற்றி
எங்கடம் பாலிரங் காததென் னேவிசை நான்மறையின்
சங்கமுங் கீதத் தமிழ்ப்பாட லுஞ்சத்த சாகரம்போற்
பொங்குதென் பேரைப் புனிதா கருணைப் புராதனனே.

22. இன்றாகு நாளைக்கு ணன்றாகு மென்றிங் கிருப்பதல்லால்
ஒன்றா கிலும்வழி காண்கில மேயுன் னுதவியுண்டேல்
பொன்றாம னுங்கள் பிழைப்போங் கருணை புரிந்தளிப்பாய்
அன்றா ரணங்தொழ நின்றாய்தென் பேரைக் கதிபதியே.

23. வள்வார் முரசதிர் கோமான் வடமலை யப்பன்முன்னே
விள்வாரு மில்லை யினியெங்கள் காரியம் வெண்டயிர்பாற்
கள்வா வருட்கடைக் கண்பார் கருணைக் களிறழைத்த
புள்வாக னுவன்பர் வாழ்வேதென் பேரைப் புராதனனே.

---

19. இடைந்து-மெலிந்து. இப்புலை யென்றது இழிந்த சிறையை.

20. வசுதேவி-தேவகி.

21. திங்கள் ஒன்றாக-ஒருமாதமாக. நான்மறையின் சங்கம்-நான்கு வேதங்களின் தொகுதி. சத்த சாகரம்-ஏழு கடல்.

22. இன்று ஆகும்-இன்று நன்மை உண்டாகும். பொன்றாமல்-இறவாமல்.

23. வள் வார்-வலிய தோலையுடைய. வடமலையப்பன்-பதினேழாம் நூற்றாண்டில் நாயக்க அரசரது பிரதிநிதியாகத் திருநெல்வேலிச் சீமையை ஆண்டு வந்த வடமலையப்பபிள்ளையன். கருணையையுடைய புள் வாகனு, களிறழைத்த புள்வாகனுவென்று கூட்டுக; புள்-கருடன். (ஸ்ரீ-ம்.) 'கரிணிக் கடாவழைத்த'

24. பறவைக் கரசனைக் கண்டோடும் பாம்பெனப் பாதகமாம்
உறவைக் கரங்கொண் டொழிப்பதென் றேபவத் தூடழுந்தித்
துறவைக் கருது மவர்க்கருள் பேரையிற் றூயவமா
சறவைத்த செம்பொற் றுகிலிடை யாயச்சு தானந்தனே.

25. வீயாம லுங்கண் மெலியாம லிந்த வினையகற்றி
நாயா கியவெங்க ளைக்காத் தருணவ நீதமுண்ட
வாயா வொருபத்து மாதஞ் சுமந்து வருந்திப்பெற்ற
தாயா கியகுழைக் காதாவென் பேரைத் தயாநிதியே.

26. கண்டோ மிலைமுனங் கேட்டோ மிலையவன் கைப்பொருளால்
உண்டோ மிலையிவ் வினைவரக் காரண மொன்றுளதோ
தண்டோடு சக்கரஞ் சங்கேந்து மும்பர் தலைவநெடு
விண்டோய் பொழிற்றடஞ் சூழ்பேரை வந்தருள் வித்தகனே.

27. நாவையண் ணுந்தசைத் துன்றிருநாம நவில மற்றோர்
தேவையெண் ணேமித் துயர்தீர்த் திடாத திருவுளமென்
கோவைவண் ணாக முடிமே லொருபதங் கொண்டுநின்ற
பூவைவண் ணாவிண் ணவர்போற்றும் பேரைப் புராதனனே.

28. ஒருநாளு நின்னை வணங்காதி ரோங்கண் ணுறங்கினுநின்
திருநாம மன்றிமற் றொன்றறி யோமிந்தத் தீங்ககற்றாய்
பொருநா கணையொன்றி வேரோடு மைம்மலை போற்பொலிந்த
கருநாயி றேயன்பர் கண்ணேயென் பேரையிற் காகுத்தனே.

29. உரகதங் கொண்ட கொடியோனை நீக்கி யுறுதுணையாய்ப்
பரகதி யாகவந் தஞ்சலென் பாய்பவ ளக்கதிர்பூங்
குரகத மாமுகங் போற்கவி பேரைக் குழகசெம்பொன்
மரகத மேனி யழகா கருணை வரோதயனே.

---

24. பறவைக்கரசன்-கருடன். செம்பொற்றுகில்-பீதாம்பரம்.

25. வீயாமல்-அழிந்து போகாமல். நவநீதம்-வெண்ணெய்.

26. அவனென்றது தம்மைச் சிறையிட்ட அதிகாரியை.

27. நவில்வதற்கு உன்னையன்றி மற்றொரு தெய்வத்தை எண்ணேம். கோவை வள் நாகம் முடிமேல்-கண் கூரிய வளவிய நாகமாகிய காளியனது முடிமேல்.

28. நாகணை ஒன்றி-நாகசயனத்திலே பொருந்தி. வேர் ஓடிய நீல மலைபோல விளங்கிய. நாகணைக்கு வேர் உவமை.

29. உரகதம்-வலிய கோபம். கொடியோனென்றது அதிகாரியை. பவளக்கதிர்-பவளநிறமுடைய செந்நெற்கதிர். குரகதம்-குதிரை. நெற்கதிர்க்குக் குதிரைமுகம் உவமை. கவி-கவிக்கும்; வளைந்துநிற்கும்.

30. சிந்தா குலந்தவிர்த் தெங்களை யூரிற் றிரும்பவழைத்
துன்று மரைச்சர ணந்தொழ வேயரு ளும்பர்தொழும்
எந்தாய் பொருநைத் துறைவா வரிவண் டிசைபயிற்றும்
கொந்தார் துளவப் புயத்தாய் மகரக் குழைக்கொண்டலே.

31. உய்வண்ண மெங்கட் குதவியுஞ் சேலென் றுறுதுணையாய்
எவ்வண்ண மித்துய ரந்தவிர்ப் பாய்கதி ரீன்றுபுனற்
செய்வண்ணப் பண்ணை வளமே செறிந்ததென் பேரைவளர்
மைவண்ண மேனி யழகா கருணை வரோதயனே.

32. பலகா லிருந்து மெலிந்தூச லாடும் பழவினையை
விலகா திருந்த திருவுள மேதுகொல் விண்ணவர்க்கா
உலகா ளிலங்கையர் கோமா னுயிர்க்கும்வண் டோதரிக்கும்
குலகால னாகிய கோவே மகரக் குழைக்கொண்டலே.

33. அடங்காத் தனம்புதைத் தார்போன் மெலிந்தடி யேங்களிந்த
மடங்காத் திருந்து சலியாம லித்துயர் மாற்றுகண்டாய்
தடங்காத் திகழுந் தமிழ்ப்பேரை வாழுந் தயாபரபொற்
குடங்காத்து வெண்டயி ருண்டாய் மகரக் குழைக்கொண்டலே

34. பங்கே ருகத்தை யிரவி புரந்திடும் பான்மையைப்போற்
செங்கேழ்க் குமுதத்தைத் திங்கள் புரக்குஞ் செயலினைப்போற்
கொங்கே கமழு மிருசர ணும்புயங் கொண்டுதினம்
எங்கே யிருந்துங் குழைக்காத ரெம்மை யிரட்சிப்பரே.

35. எங்களை யுந்தொண்ட ரென்றே யிரங்கி யினியெங்கள்பா
வங்களை யும்படிக் கேயருள் வாய்கனி வாயமுதம்

---

30. சிந்தாகுலம்-மனக்கவலை. சரணம்-திருவடி. பொருநை-தாமிர பர்ணி. வரி-கோடு. கொந்து-கொத்து.

31. கதிரை ஈன்று வளம்செறிந்த என்று கூட்டுக. புனலையுடைய செய்யாகிய பண்ணை; செய்-வயல். மைவண்ணம்-மேகநிறம்.

32. விலகாது-விலக்காமல்; தொகுத்தல் விகாரம். இலங்கையர் கோமான்-இராவணன்.

33. தனம்-செல்வத்தை. இந்த மடமென்றது சிறைக்கூடத்தை. சலியாமல்-நடுங்காமல். தடமும் காவும் திகழும்; உம்மைத்தொகை.

34. பங்கேருகம்-தாமரை. இரவி-சூரியன. செங்கேழ்-செந்நிறத்தை யுடைய[illegible]-ம்.) 'பங்கே ருகத்துக் கிரவியைப் போலவும் பான்மதியாற் செங்கேழ்க் குமுத மலர்வது போலவுந் தீங்ககற்றி.' கொங்கு-நறுமணம்.

35. எங்களையும்: உம்மை, இழிவுசிறப்பு. பாவம் களையும்.

பொங்களை யுண்டு தெவிட்டியன் பாற்பரி பூரணமாம்
திங்களை வென்ற முகத்தாய்தென் பேரையிற் சீதரனே.

36. விடணட வாது கருமஞ்செய் தானே விலக்கினியெம்
முடலடு மாதுயர் தீர்த்தெமை யாண்டரு ளுண்மையிது
திடன்ட மாத ருடனே பதாம்புயஞ் சேப்பநின்று
குடநட மாடு முகுந்தா மகரக் குழைக்கொண்டலே.

37. இரவும் பகலு மெலியாம லெங்கட் கிரங்கியுனைப்
பரவும் படிக்கிவ் வினைதீர்த் தருளெம் பாரதப்போர்
விரவுங் கொடுந்துயர் நூற்றுவர் மாள விசயனுக்கா
அரவுந்து தேர்முன மூர்ந்தாய்தென் பேரையி லச்சுதனே.

38. பாற்கொண்ட நீரன்னம் வேறுக்கு முன்னைப் பரவுமெங்கள்
மேற்கொண்ட வல்வினை வேறுக்க நீயன்றி வேறுமுண்டோ
சூற்கொண்ட செந்நெல் வயற்பேரை யந்தணர் சூழ்ந்துதொழும்
கார்க்கொண்ட லேகுழைக் காதா கருணைக் கருங்கடலே.

39. அறிவு மறமுந் தரும்பல பூதமு மாரணத்தின்
பிறிவும் பிறிதொரு தெய்வமு நீயிப் பெருவினையாற்
செறியுந் தமியர் துயர்தீர்த் திடாததென் றெண்டிரைநீர்
எறியும் பொருநைத் துறைவாதென் பேரைக் கிறையவனே.

40. நெருங்கடர் தீவினை நீக்கியுன் னாம நினைப்பதற்குத்
தருங்கட னெங்களைக் காப்பதன் றோதளர்ந் தேமெலிந்த
மருங்கட வீங்கும் படாமுலைப் பூமட மான்றழுவும்
கருங்கட லேகுழைக் காதாதென் பேரையிற் காகுத்தனே.

---

36. விடல் நடவாது-எம்மை விட்டுவிடுதல் நிகழாமல். விலக்கு-விலக்குவாயாக. (பி-ம்.) 'விடநடமாது', 'எம்முடனடமா' திடன் நட மாதர்-வலியையுடைய நடம்புரியும் கோவியர். சேப்ப-சிவப்ப. குடநடம்-கண்ணன் ஆடிய குடக்கூத்து.

37. விசயன்-அருச்சுனன். அரவு உந்து தேர்முனம்-பாம்புக் கொடியைப் பொருந்துகின்ற துரியோதனன் தேருக்கு முன். ஊர்ந்தாய்-அருச்சுனன் தேரை ஊர்ந்தவனே.

38. பாற்கொண்ட நீர்-பாலிலே கொண்ட நீரை. கார்க்கொண்டல்-நீருண்ட கரிய மேகம்.

39. (பி-ம்.) 'அறிவு மறிவுந் தரும்' ஆரணம்-வேதம். தமியர்-துணையின்றித் தனியே இருப்போர்.

40. நெருங்கு தீவினை, அடர் தீவினையென்க. மருங்கு அட-இடையை மெலிவிக்கும் பொருட்டு. பூமட மான்-திருமகள்.

41. செழுந்தா மரையிலைத் தண்ணீ ரெனநின்று தீவினையாதல்
அழுந்தாம னுங்கண் மலங்காமற் காத்தரு ளாரணத்தின்
கொழுந்தாதி மூலமென் றேதெளிந் தோதிய கொண்டல்வண்ணா
கழுந்தார் சிலைக்கை யரசேதென் பேரையிற் காகுத்தனே.

42. பெய்யுங் கனமழை கண்டபைங் கூழெனப் பேருதவி
செய்யுங் கடவுளர் வேறிலை காணிந்தத் தீங்ககற்றி
உய்யும் படிக்கெங் களைக்காத் தருணற வூற்றிருந்து
கொய்யுந் துளவப் புயத்தாய் மகரக் குழைக்கொண்டலே.

43. பஞ்சின்மென் சீறடிப் பாண்டவர் பாவை பதைபதையா
தஞ்சலென் றேயன் றவண்மானங் காத்தனை யப்படியிவ்
வஞ்சகந் தன்னையும் தீர்த்தருள் வாய்கர வால்வருந்தும்
குஞ்சரங் காத்த முகிலே மகரக் குழைக்கொண்டலே.

44. மறுகாம னுங்கண் மனஞ்சலி யாமலிவ் வஞ்சகர்வந்
திறுகாம லெங்களைக் காத்தருள் வாய்துண ரீன்றமணம்
பெறுகாவில் வாசச் செழுந்தேற லுண்டிளம் பேட்டுவரி
அறுகால் வரிவண் டிசைபாடும் பேரையி லச்சுதனே.

45. காக்குந் தொழிலுனக் கல்லாது வேறு கடவுளரை
நாக்கொண்டு சொல்லத் தகுவதன் றேநணு காதுவினை
நீக்கும் படிக்கருட் கண்பார்த் திரட்சி நிறைந்தபுனல்
தேக்கும் பொழிற்றென் றிருப்பேரை வாழும்செழுஞ்சுடரே.

46. கண்ணுக் கிடுக்கண் வரும்போ திமைவந்து காப்பதுபோல்
எண்ணுக்கு ணீங்கு துயர்தவிர்த் தேயெங்க ளுக்கருள்வாய்
விண்ணுக்கு ளோங்கும் பொழிற்குரு கூரன் விரித்ததமிழ்ப்
பண்ணுக் கிரங்கும் பரமாதென் பேரைப் பழம்பொருளே.

---

41. மலங்காமல்-மயங்காமல். கழுந்து-வில்லின் கட்டை.

42. கனமழை-மிக்க மழை. பைங்கூழ்-பயிர். நறவு-தேன்.

43. பாண்டவர் பாவை-திரௌபதி. சீறடிப்பாவை. கரவு-முதலை. குஞ்சரம்-கசேந்திரன்.

44. மறுகாமல்-வருந்தாமல். துணர்-பூங்கொத்து. கா-சோலை. தேறல்-தேன். வரி-கோடு, பாட்டு.

45. (பி-ம்.) 'தகுவதன்றோ' நணுகாது-நெருங்காமல்.

46. குருகூரன்-நம்மாழ்வார்.

47. சத்துரு வைத்தள்ளி யெங்களைக் காத்துத் தயவுபுரிந்
தித்துரு வத்தையு மாற்றுகண் டாயிலங் காபுரியோன்
பத்துரு வங்கொண்ட சென்னிக டோறும் பதித்தமுடிக்
கொத்துரு வக்கணை தொட்டாய் மகரக் குழைக்கொண்டலே.

48. இரும்பான கன்னெஞ்ச வஞ்சக ரூர்க்கு மிடர்விளைப்போன்
திரும்பாம னீக்கி யெமைக்காத் தருணறை தேங்குமுகை
அரும்பாரு மென்மல ராராமந் தோறு மமுதம்பொழி
கரும்பாருஞ் செங்நெல் வயற்பேரை வாழ்கரு ணாநிதியே.

49. முன்னிற் புரிந்த பெருவினை யான்முற்று மேமலங்கி
இன்னற் படாம லெமைக்காத் தருளிறை தீர்த்தருள்பூங்
கன்னற் றடமுங் கமுகா டவியுங் கதிர்ப்பவளச்
செங்நெற் பழனமுஞ் சூழ்பேரைத் தெய்வ சிகாமணியே.

50. தீதாம் பரத்தர்செய் தீவினை யாவையுந் தீர்த்தளிக்கும்
மாதாம் பரத்துவ னீயல்ல வோமறை யோர்பரவும்
வேதாம் பரத்தி னடுவே யரவின் விழிதுயின்ற
பீதாம் பரத்தெம் பெருமான்றென் பேரையிற் பேரொளியே.

51. ஆலமென் ஞேருருக் கொண்டானை நீக்கி யகற்றவிது
காலமன் றேவெங் களைக்காத் தருளக் கடனிலையோ
ஞாலமென் றோகையும் பூமாது மேவிய நாததும்பி
மூலமென் றேதிய மாலே நிகரின் முகில்வண்ணனே.

52. மெய்கொண்ட பொய்யென வித்துயர் மாற்றி விலக்குமுற்றும்
கைகண்ட தெய்வ முனையன்றி வேறிலை கான்றவிடப்
பைகொண்ட நாக முடிமேற் சரணம் பதித்து நடம்
செய்கண் டகர்குல காலாதென் பேரையிற் சீதரனே.

---

47. துருவம்-கொடுமை. இலங்காபுரியோன்-இராவணன்.

48. ஆராமம்-சோலை.

49. இறை-வரி. கன்னல்-கரும்பு.

50. பரத்தர்-தூர்த்தர் (சிலப்.) மாது ஆம் பரத்துவன்-தாயாகிய மேலானவன். வேதாம்பரம்-வேதமாகிய கடல். (பி-ம்.) 'யறிவின்'

51. ஆலம்-விடம். ஞாலமென்றோகை-பூமிதேவி. தும்பி-யானை.

52. கான்ற-உமிழ்ந்த. நாகம்-காளியன்.

53. முத்தித் தபோதனர்க் குங்கலை வேத முதல்வருக்கும்
சித்தித்த நின்பதஞ் சேவிப்ப தென்றுகொ றேவகிமுன்
சுத்தித்த தித்தி யெனநடித் தேயிடைத் தாயர்முனம்
மத்தித்த வெண்ணெய்க் குகந்தாய்தென்பேரைமணிவண்ணனே.

54. நிம்ப வளக்கனி போற்கசப் பாகிய நீசனுளம்
வெம்ப வளத்த வினையணு காமல் விலக்கிவிடாய்
கும்ப வளத்தயி ருங்குடப் பாலும் குனித்தருந்தும்
செம்ப வளத்தெம் பெருமான்றென் பேரையிற் சீதரனே.

55. ஊழ்வே தனைசெய்ய வாராதுன் னாம முரைத்தவர்க்குத்
தாழ்வேது மில்லை மிகுநன்மை யேவரும் சஞ்சரிகம்
சூழ்வேரி தங்கும் துழாய்ப்புய லேயெங்கள் துன்பகற்றும்
வாழ்வே மரகத வண்ணதென் பேரையின் மாதவனே.

56. முன்னம் பழகி யறியோ மவனை முகமறியோம்
இன்னம் பழவினை வாராமற் காத்தரு ளேற்றசெங்கால்
அன்னம் பழன வயற்றூறுந் துஞ்சு மடர்ந்தபசுந்
தென்னம் பழஞ்சொரி யுந்திருப் பேரையிற் சீதரனே.

57. ஆக நகைக்கும் படிதிரி வோன்கடந் தப்புறமாய்
போக நகத்திற் புகுந்தோட வேயருள் போர்க்களத்தில்
மாக நகப்பெயர் கொண்டானை மார்வம் வகிர்ந்தசெழும்
கோக நகச்செங்கை யானே மகரக் குழைக்கொண்டலே.

58. பொய்யா னிறைந்த கொடியவெம் பாதகன் பொய்யும்வம்பும்
செய்யாம லெங்களைக் காத்தருள் வாய்செழுந் தாரரசர்
மொய்யாக வந்தனிற் பாண்டவர்க் காக முழங்குசங்கக்
கையா கருமுகில் மெய்யாதென் பேரையிற் காகுத்தனே.

---

53. சித்தித்த - கிடைத்த. தேவகி - கண்ணனைப் பெற்ற தாய். இடைத்தாயர்-யசோதை.

54. நிம்ப வளக்கனி-வேப்பம்பழம். வெம்ப-வெம்பும்படி. வளத்த வினை-மிக்கவினை. கும்ப வளத்தயிர்-குடத்திலுள்ள வளப்பத்தையுடைய தயிர். செம்பவளமென்றது திருவாயை.

55. சஞ்சரிகம்-வண்டு. வேரி-தேன்.

56. துஞ்சும்-தூங்கும். தென்னம்பழம்-தேங்காய்.

57. திரிவோனென்றது அதிகாரியை. நகம்-மலை. (பி-ம்.) 'அடு போர்க் களத்தில்' கநகப் பெயர் கொண்டோன்-இரணியன். கோக நகம்-தாமரை.

58. (பி-ம்.) 'பொய்யாய்' ஆகவம்-போர்க்களம். (பி-ம்.) 'மெய்யாக', 'விளங்குசங்கக்'

59. இகலிட மான புலையனை மாற்றினி யெங்களுக்கோர்
புகலிட நீயன்றி வேறுமுண் டோபுகல் கற்பமெலாம்
பகலிட மான சதுமுகத் தேவொடு பண்டொருநாள்
அகலிட முண்ட பிரானேனதென் பேரைக் கதிபதியே.

60. கையக நெல்லிக் கனிபோ லெமைத்தினங் காத்தளிக்குந்
துய்யகண் ணன்செழுங் காயா மலர்வண்ணன் சுக்கிரனுர்
செய்யகண் ணைத்துரும் பாலே கிளறிச் சிறுகுறளாய்
வையக முன்றளந் தான்றமிழ்ப் பேரையின் மாதவனே.

61. கலகக் கொடிய புலையனெம் பாற்செய்த காரியத்தை
விலகக் கடனுனக் கல்லாது வேறிலை வேலைசுற்றும்
உலகத் தனிமுத லென்றறி யாம லுபாயம்செய்த
அலகைத் துணைமுலை யுண்டாய்தென் பேரையி லச்சுதனே.

62. கைச்சக டைத்தொழில் கொண்டே திரியுங் கபடன்செய்த
இச்சக டத்தையு மாற்றி விடாயிடை மாதருறி
வைச்ச கடத்தயி ருண்டே தவழ்ந்தன்று வஞ்சன்விட்ட
பொய்ச்சகடத்தை யுதைத்தாய்தென் பேரையிற் புண்ணியனே.

63. புண்ணிய நந்தகு மாராமுன் னுட்செய்த புன்மையினுற்
பண்ணிய நந்தம் வினைதவிர்ப் பாய்பல காலுமுளம்
கண்ணி யனந்தன் முடிமே னடிக்குங் கருணைமுகில்
எண்ணி யனந்த மறைதேடும் பேரைக் கிறையவனே.

64. இறையவ னெம்பெரு மானெடு மாலெறி நீர்ப்பொருநைத்
துறையவ னேழை யடியார் சகாயன் சுடரிரவி
மறைய வனந்திகழ் நேமிதொட் டானென் மனக்கருத்தில்
உறைய வனஞ்சுடுந் தீப்போலப் பாதக மோடிடுமே.

---

59. இகல் இடமான-பகைக்கு இடமான. புகலிடம்-அடைக்கலத் தானம். சதுமுகத் தே-பிரமதேவன். தேவொடு அகலிடத்தை உண்ட.

60. குறள்-வாமனவதாரம். சிறுகுறளாய்க் கிளறி.

61. (பி-ம்.) 'காரணத்தை' விலக-விலக்க. வேலை-கடல். அலகை யென்றது பூதனையை.

62. கைச்ச-யாவரும் வெறுத்த. சகடம்-சண்டை; திசைச்சொல். உம்: எச்ச வும்மை. உறி வைச்ச கடத்தயிர்-உறியிலே வைத்த குடத்திலே உள்ள தயிரை. சகடம்-சகடாசுரன்.

63. கண்ணி-நினைந்து.

64. வனம் திகழ் நேமி-அழகு விளங்கிய சக்கராயுதம். வனம்-சுடும்-காட்டை யெரிக்கும்.

65. அக்கணஞ் சாதெந்த வேளையென் றுனு மளித்தனைநீ
இக்கணஞ் சால வருந்துமெம் பாவிரங் காததென்னோ
மைக்கணஞ் சாயன் மடமாதுக் காக வளர்மிதிலை
முக்கணன் சாப மிறுத்தாய்தென் பேரை முகில்வண்ணனே.

66. ஆடகச் சேவடி யாலெம தாவி யளித்தனைகார்க்
கோடகப் பாவிகள் வாராமற் காத்தனை கோசலநன்
னாடகத் தோர்சிலை தாங்கிவெங் கூற்றை நகைக்குமந்தத்
தாடகைக் கோர்கணை தொட்டாய்தென் பேரைத் தயாநிதியே.

67. பரனே பராபர னேபதி யேபதி கொண்டசரா
சரனே நெடும்பர தத்துவ னேசமர் வேட்டெழுந்த
கரனே முதற்பதி னாலாயி ரங்கண் டகரைவெல்லும்
உரனே நிகர்முகில் வண்ணாவிந் நாள்வந் துதவினையே.

68. காலிக் கொருவரை யேந்தினை நெஞ்சங் கலங்குமெங்கள்
மேலிக் கொடுவினை வாராமற் காத்தனை மேன்மைதரும்
பாலுக் கினிய மொழியாளைத் தேடிப் பகையையெண்ணா
வாலிக் கொருகணை தொட்டாய்தென் பேரைமணிவண்ணனே.

69. அராமரி யாதை யறியாத வஞ்ச னதட்டவெமைப்
பொராமர ணாதிகள் வாராமற் காத்தனை பூதலத்தில்
இராமா வெனும்படிக் கேகீ யொருகணை யேவிநெடு
மராமர மேழுந் துளைத்தாய்தென் பேரையின் மாதவனே.

---

65. அக்கண்-அந்தக்கணத்தில். மைக்கண்ணையும் அழகிய சாயலை யும் உடைய மடமாது; சீதை. முக்கணன் சாபம் - சிவபிரானது வில்; 77-ஆம் செய்யுளைப் பார்க்க.

66. ஆடகம்-பொன். கார்க்கோடகப்பாவிகள்-கார்க்கோடகனென் னும் தீய பாம்பைப்போலக் கொடியவர்கள். கோசல நன்னாடு அகத்து-கோசல நாட்டில். ஓர் சிலை தாங்கிக் கணைதொட்டாய்.

67. பதியே-தலைவனே. சராசரன்-சராசரங்களையுடையவன். சமர்-போரை. கண்டகர்-அரக்கர்கள். உரனே-வலிமையையுடையவனே. நிகர்-ஒளி.

68. காலிக்கு-பசுக்களைப் பாதுகாக்கும் பொருட்டு. ஒரு வரை-கோவர்த்தனமலை. பாலுக்கு இனிய-பாலைக் காட்டிலும் இனிமையை யுடைய மொழியாள்: சீதை.

69. அரா - பாம்பு போன்றவன். (பி-ம்.) 'மரியாதி' 'அதட்டி யெமைப்' பொரா-பொருது.

70. மூாதவ னேகரு ணாகர னேயென் மனவிருட்கோர்
ஆதவ னேகரு மாணிக்க மேமல ராசனத்திற்
போதவ னேக மெனவே பரவிப் புகழ்ந்தகுழைக்
காத வநேகம் பிழைசெய்த வெங்களைக் காத்தருளே.

71. அதிபாவஞ் செய்து பிறந்தாலு மப்பொழு தஞ்சலென்னல்
விதிபார மன்றுனக் கெங்களைக் காப்பது வேரிமடற்
பொதிபாளை மீற நெடுவாளை யாளைப் பொருதுவரால்
குதிபாய் பொருநைக் கதிபா மகரக் குழைக் கொண்டலே.

72. மகரக் குழையு முககாந்தி யும்மணி மார்பமும்பொற்
சிகரக் குழையும் புயபூ தரமுநற் சேவடியும்
பகரக் குழையுந் திருநாம முங்நெடும் பாதகநோய்
தகரக் குழையும் படியுரை யீருயிர் தாங்குதற்கே.

73. ஓருரு வாயிரண் டாய்மூவ ராகி யுடநிடதப்
பேருரு நான்கைம் புலனு யறுசுவைப் பேதமதாய்ப்
பாருரு வேழெட் டெழுத்தாய்ப் பகரும் பிரணவமாய்க்
காருரு வாங்குழைக் காதருண் டேயெமைக் காப்பதற்கே.

74. இடைந்தோ ரிருப்பிட மில்லாத வஞ்சக னேங்கிமனம்
உடைந்தோட நோக்கி யெமைக்காத் தனையுயர் வீடணனுங்

---

70. கருணாகரனென்பது இராமபிரான் பெயர்களுள் ஒன்று. ஆதவன்-சூரியன். போதவன்: பிரமதேவன்; இடுகுறிப் பெயர் மாத்திரையாய் நின்றது.

71. அதிபாவம்-மிக்க பாவம். விதி-உனக்குக் கடமை. எங்களைக் காப்பது உனக்குப் பாரமன்று. வேரி-தேன். வாளை மீற. பொருநை-தாமிரபர்ணி.

72. பொற்சிகரக் குழையும்-பொன் முடியிலுள்ள தளிராகிய திருத்துழாயும். குழையும்-மனம் உருகும். குழையும்படி-அவர் மனம் இளகும் படி.

73. ஓருருவாய்-ஒரே கடவுளாகி. இரண்டாய்-திருமால், திருமகள் என்னும் இருவேறு வடிவினராகி. மூவராகி-மும்மூர்த்தியாகி; உபநிஷதப் பேருரு நான்கு-நான்கு வேத அந்தத்திலும் உரைக்கப் படும் பொருள்; பேருரு நான்கென்றது நால்வகை வியூகவடிவத்தை யெனலுமாம். பாருருவேழ்-எழுலகத்தின் உருவம். எட்டெழுத்து-அஷ்டாட்சரம்.

74. இடைந்து-மெலிந்து. சுரும்பர்-வண்டு. ஓகை-உவகை.

தடைந்தே னெனவன் றரசளித் தாயறு காற்சுரும்பர்
றுடைந்தோகை கூரு மலர்ப்பொழிற் பேரையிற் கோவிந்தனே.

75. கோவிந்த னுயர்குலத் துதித் தோன்செழுங் கொவ்வைச்செவ்வாய்
மாவிந்தை நாயகன் பூமாது கேள்வன்பொன் வானவர்தம்
காவிந்த நானிலத் தாக்கிய பின்னை கணவன் பொற்றாள்
மேவிந்த நாளெண்ணு நெஞ்சேதென் பேரை விமலனையே.

76. விண்டலத் தாபத ருமிமை யோருநல் வேதியரும்
பண்டலத் தால்வருந் தாதவர்க் காகப் பகைதவிர்த்தாய்
மண்டலத் தாதவன் போற்கதிர் வீசு மணிமகர
குண்டலத் தாய்தண் டமிழ்ப்பேரை யெங்கள் குலதெய்வமே.

77. புராதனன் மாயன் புருடோத் தமன்பரி பூரணன்வெவ்
விராதனை மாய வதைசெய்த காரணன் விண்ணவர்கோன்
சராதன மாய மெனவே யிறுத்தவன் றன்றுணையாம்
கிராதனை மாலுமி கொண்டான்றென் பேரையிற் கேசவனே.

78. வலையுற் றினம்பிரி யுங்கலை போல மறுகிமனம்
அலைவுற்று நைந்து மெலியாமற் காத்தனை யம்புவிக்கே
நிலையுற்ற தெண்டிரை முந்நீரைச் சீறு நெடும்பகழிச்
சிலையுற்ற செங்கை முகிலேதென் பேரையிற் சீதரனே.

79. சீதர னேமது சூதன னேசிலை யேந்துபுய
பூதர னேபுல வோரமு தேபுவி தாங்கியகா

---

75. மாவிந்தை-சயலட்சுமி. வானவர்தம்கா - பாரிசாதவிருட்சம். பின்னை-நப்பின்னைப் பிராட்டியார். மேவு-அடைவாயாக. (பி-ம்.) 'நாயெனு நெஞ்சே'

76. தாபதர்-முனிவர்கள். இமையோர்-தேவர். அலத்தால்-துன்பத்தால். வருந்தாது அவர்க்காக. பகையென்றது அசுரர்களுடைய பகையை. மண்டலத்து-உலகில்; மண்டலத்தையுடையவெனலுமாம்; மண்டலம்-வட்டம். (பி-ம்.) 'குண்டலத் தாய்தமிழ்ப் பேரையி லெங்கள் குலதெய்வமே'

77. புராதனன்-பழையவன். சராதனம்-வில்லை. இறுத்தவன்-ஒடித்தவன்; ஒடித்தது, சீதையை மணம்புரிவதற்கு முன். கிராதனை-குகனாகிய வேடனை. மாலுமி-படகோட்டியாக.

78. கலை-கலைமான். மறுகி-வருந்தி. பகழி-அம்பு. (பி-ம்.) 'சீறி நெடும்பகழிச்'

79. புயபூதரன்-தோள்களாகிய மலைகளையுடையவன்; மலைகளைப் போன்ற தோள்களையுடையவனென்பது கருத்து. காகோதரம்-பாம்பு; புவிதாங்கிய காகோதரமென்றது ஆதிசேடனை.

ஸோதர னேயன்றோ ராவிலை மேற்பள்ளி கொண்டருள்தா
மோதர னேகுல நாதா நிகரின் முகில்வண்ணனே.

80. சேரீர் செனன மெடுத்தவந் நாண்முதற் றீங்குசெய்வ
தோரீர் சடைப்பட் டுழலுங்தொண் டீர்நற வூற்றிதழித்
தாரீச னார்க்கு பிரமவொழித் தேயொரு சாயகத்தால்
மாரீச னைவென்ற மால்குழைக் காதர் மலரடிக்கே.

81. புங்கவ னெம்பெரு மானெடி யோன்புடை தோள்புனையும்
சங்கவ னம்பெரு மாநிலம் போற்றுந் தயாபரன்மா
துங்க வனந்திரி யுஞ்சூர்ப் பணகை துணைமுலைகள்
வெங்க வனத்தி லறுத்தான்றென் பேரையில் வித்தகனே.

82. வித்தக னேமிப் பிரான்றிரு மாறிரி விக்கிரமன்
பத்தர்க ணெஞ்சுறை யும்பர மானந்தன் பண்டொருநாள்
மத்தக மாமலைக் கோடொடித் தான்முகில் வண்ணனென்றே
கத்தக மேயிக மேபெற லாநற் கதியென்பதே.

83. கூசுங்கண் டர்முன் வரக்கொடுங் கூற்றுங் குளிர்ந்தமணம்
வீசுங்கண் டர்நறுந் தண்ணந் துழாய்விதி யால்விளைந்த
மாசுங்கண் டர்வினை யும்மருண் டோடு மகிழ்ந்தொருகாற்
பேசுங்கண் டர்தண் டமிழ்ப்பேரை வானப் பிரானெனவே.

84. அன்பர்க் கருள்வ தனக்கே தொழிலடி யேங்களிந்தத்
துன்பப் படாமற் றுணைசெய்வ தென்றுகொல் சூட்டுமணி
இன்பப் பஃறலைப் பாம்பணை யிற்கண் ணிணைதுயிலும்
என்பற்ப நாப முகுந்தாதென் பேரைக் கிறையவனே.

---

80. சடைப்பட்டு-இளைப்புற்று. சாயகம்-அம்பு. மலரடிக்கே சேரீர்.

81. புடை-பக்கத்தில். தோள் புனையும் சங்கவன்-திருப்புயத்தில் தரித்திருக்கும் சங்கத்தையுடையவன். வெங்க வனத்தில்-கொடிய ஆயுதத்தால். இலக்குமணன் செய்த செயலை இராமன் மேல் ஏற்றிக் கூறினர்.

82. நேமி - சக்கராயுதம். மத்தகமாமலை - குவலயாபீடமென்னும் யானை. அகமே கத்து. இகமே-இவ்வாழ்விலேயே. நற்கதியென்பதை இகத்திலேயே பெறலாம்.

83. கொடுங்கூற்றும் முன்வரக் கூசும். மாசும் வினையும் ஓடும்; கண்டர் நான்கும் அசைநிலை. எனவே பேசுவீர்களாக.

84. சூட்டுமணி - உச்சிமணிகளையுடைய. (பி-ம்.) 'பாம்பணையின் கண் விழிதுயிலும்'

85. மூராரி கராவை முனிந்தான் றயாபர மூர்த்திமுக்கட்
புராரி கபால மொழித்தான் சதுமறை போற்றநின்றன்
பராரித யத்தி லிரானன்ப ரேத்தும் படியிருப்பான்
சுராரி களைப்பட வென்றான்றென் பேரையிற் றூயவனே.

86. வேலிக்கு ணின்று விளைபயிர் போல விரும்புமெங்கள்
பாலிக் கொடுந்துயர் தீர்த்தளித் தாய்பகை வென்றபுய
வாலிக்கும் வேலைக்கு மானுக்கு மாய மயன்மகடன்
தாலிக்குங் கூற்றுவ னைய்தென் பேரைத் தயாநிதியே.

87. பாரதி நாவி லுறைவோனுந் தேவர் பலருமன்பு
கூரதி காந்தி மலர்ச்சே வடியிணை கூறுமைவர்
சாரதி பேரை வளர்சக்ர பாணி சரணமென்றே
மாருதிக் கீந்த திருநாம நாளும் வழுத்துவனே.

88. பேராழி வையக மெல்லா மனுமுறை பேதலியா
தோராழி யோச்சி யரசளித் தேபின் னுறுவர்பதம்
கூராழி யேந்துந் தமிழ்ப்பேரை வாழ்குல நாதனெழிற்
காராழி நீர்வண்ணன் பேரா யிரத்தொன்று கற்றவரே.

89. சிகரந் திகழுநின் கோபுர வாசலிற் சேவிக்கநாம்
பகருந் தவமுனம் பெற்றில மோமடப் பாவையர்தம்
தகரந் தடவு மளகா டவியிற் றவழ்ந்திளங்கால்
மகரந்த மொண்டிறைக் குந்திருப் பேரையின் மாதவனே.

---

85. கராவை - முதலையை. சதுமறை-நான்குவேதங்கள். பரார்-அயலார்; பரரென்பது நீண்டது. அன்பர் ஏத்தும்படி அவர்கள் இதயத்தில் இருப்பான். சுராரிகளை-அசுரர்களை.

86. வேலை-சமுத்திரம். மான்-மாரீசன். மயன் மகள்-மண்டோதரி. வாலி முதலியவர்களுக்குக் கூற்றுவனானது இராமாவதாரத்தில். தாலி யென்றது இங்கே கணவனென்னும் பொருளையுடையது.

87. பாரதி நாவில் உறைவோன்-கலைமகள் தன் நாவிலே தங்கப் பெற்ற பிரமதேவன். அதிகாந்தி-மிக்க ஒளியையுடைய. (பி-ம்.) 'அதி காந்த' அர்ச்சுனனுக்குச் சாரதியென்றது, ஐவர் சாரதியென்றது அந்தச் சாரத்தியம் ஐவருக்கும் பயன்பட்டமை குறித்து.

88. பேராழி-பெரிய கடல். பேதலியாது-மாறாமல். ஆழியோச்சி-ஆக்ஞா சக்கரத்தைச் செலுத்தி. பின்பதம் உறுவர். (பி-ம்.) 'உறும் பதவி' கூர் ஆழி-கூரிய சக்கராயுதம். கற்றவர் அரசளித்துப் பின் பதம் உறுவர்; பதம்-நற்பதவி.

90. மந்தர மாமலை மத்தாக வேலை மதித்தனைகா
மந்தர மீது புரியாம னூற்றுவர் மாயவைவர்
மந்தர ஞால மரசாள வைத்தனை வான்பகைமுன்
மந்தர சூழ்ச்சியின் வென்றாய்தென் பேரையின் மாதவனே.

91. வாமனை னூற்றெண்மர் போற்றும் பிரான்மல ராள்கணவன்
பூமனை நாபியிற் பூத்தோ னடங்கப் புவியிடந்தோன்
காமனைத் தந்த திருப்பேரை வாழ்கரு ணாநிதிதன்
நாமனைச் சிந்தையில் வைத்திலர் வீழ்வர் நரகத்திலே.

92. அருங்கொடிக் கோர்கொழுகொம்பெனவெம்மையளிப்பதுஞ்செய்
திருங்கொடி யோனையு மாற்றிவிட் டாயிறு மாந்துவிம்மி
மருங்கொடித் தோங்கு முலைச்சா னகியை வருத்தஞ்செய்த
கருங்கொடிக்கோர்கணைதொட்டாய்தென் பேரையிற்காகுத்தனே.

93. அரந்தரும் வேல்விழி யாரனு ராக மகற்றியுயர்
வரந்தர வல்லவன் வானப் பிரானெங்கள் வல்வினையைத்
துரந்தர னாகவந் தஞ்சலென் றோன்றன் றுணைமலர்த்தாள்
நிரந்தரம் போற்று மவரே புரந்தரர் நிச்சயமே.

---

89. சிகரமென்றது கோபுரத்தின் உச்சியை. தகரம்-மயிர்ச்சாந்து. அளகாடவி-கூந்தற்காடு. இளங்கால்-தென்றல். மொண்டு-அள்ளி.

90. வேலை மதித்தனை-பாற்கடலைக் கடைந்தாய். காமம் தர மீது புரியாமல்-ஆசை தம்மைச் செலுத்த மிகுதியான காரியங்களைச் செய்யாமல். நூற்றுவர்-துரியோதனாதியர். (பி-ம்.) 'நூற்றுவர்மாய்த் தனைக்கா' ஞாலம் அரசாள மந்தரம் வைத்தனை-உலகை ஆளும் பொருட்டு அரண்மனையிலே நிலைபெற வைத்தாய். மந்தர சூழ்ச்சி-ஆலோசித்துச் செய்யும் காரியங்கள்.

91. நூற்றெண்மர்-இத்தலத்திலுள்ள தலவகார சாம வேதிகள் நூற்றெண்மர். பூமனை-பிரமதேவனை. நாபி-திருவுந்தி. இடந்தோன்-வராகாவதாரத்திலே பெயர்த்தவன். நாமனை-நாமத்தை; பெயரை.

92. (பி-ம்.) 'கொம்பது போலெமைக் காப்பதுஞ்செய்' மருங்கு-இடை. கருங்கொடிக்கு-காகாசுரனுக்கு; கொடி-காக்கை. தொட்டாய்-தொடுத்தாய்.

93. அனுராகம்-ஆசை. நிரந்தரம்-இடைவிடாமல். புரந்தரர்-இந்திர பதவிக்குரியவர்.

94. காண்டா வனமெரித் தான்றரித் தானென் கருத்திலன்பு
பூண்டா னெழின்மணிப் பூணு னறிவற்ற புன்மையரை
வேண்டா னடியவர் வேண்டநின் ருன்விரி நீர்ப்புடவி
கீண்டான் றமியனை யாண்டாண்டென் பேரையிற் கேசவனே.

95. கேசவன் பேரை வளர்வாசு தேவன்கை தேசிசொல்லால்
நேச வனம்புகுந் தோர்மானை வீட்டி நிசாசரரை
வாசவன் செய்த தவத்தாற் றொலைத்தருண் மாதவன்பேர்
பேச வனந்த விலும்வரு மோபெரும் பேதைமையே.

96. கழகா ரணத்தின் பயனறி யாத கபடனெம்மைப்
பழகாத வஞ்சனை நீக்குவித் தாயிடைப் பாவையர்தம்
குழகா வழுதி வளநாட கோவர்த் தனமெடுத்த
அழகா மகரக் குழையாய்தென் பேரையி லச்சுதனே.

97. அச்சுதன் பேரை யபிராமன் செஞ்சொ லசோதைக்கன்பாம்
மெய்ச்சுத னெங்களை யாட்கொண்ட மாயன் விசயனுக்கா
அச்சுத நந்தைக் குறித்தா னரவிந்த லோசனன்முன்
நச்சு தனஞ்சுவைத் துண்டானென் பார்க்கு நரகில்லையே.

98. இல்லைப் பதியென் றிருந்துழல் வீரெளி யேங்கள்சற்றும்
தொல்லைப் படாதருள் பேரையெம் மான்பதத் தூளிகொடு
கல்லைப்பெண் ணுக்குங் கருணா கரன்முன்பு கஞ்சன்விட்ட
மல்லைப் பொருதவ னென்றோத துன்பம் வராதுமக்கே.

---

94. அருச்சுனன் செயலைக் கண்ணன் செயலாகக் கூறினர், அப் பிரானருளாலே அவன் வலி பெற்றமையின். என் கருத்தில் தரித்தான்-என் உள்ளத்தில் தங்கினன்.

95. புகுந்து ஓர் மானை; மான்-மாரீசன். நிசாசரர்-அரக்கர். அனந்தல்-தூக்கமயக்கம்.

96. கழகாரணம்=கழக ஆரணம்-கழகங்களிலே பயிலப்பெறும் வேதம். இடைப்பாவையர்-கோவியர். வழுதி வளநாடு-பாண்டிநாடு.

97. சுத நந்து-வெள்ளிய சங்கத்தை. குறித்தான்-முழக்கினன். அரவிந்த லோசனன்-தாமரையைப்போன்ற திருவிழிகளை யுடையவன். தனம் சுவைத்து நஞ்சை உண்டான்; தனமென்றது பூதனையின் நகிலை.

98. தொல்லைப்படாது-துன்புறாமல். மல்லை-மற்போரில் வல்ல வர்களை.

99\. வாரா யணுவெனு நெஞ்சேயஞ் செல்வஞ் சகமகலும்
கூரா யணிந்தவன் சேவடிக் கேயன்பு கூர்ந்துமறை
பாரா யணம்பயி னூற்றெண்மர் நாளும் பரிந்துதொழும்
நாரா யணன்றிருப் பேரையெம் மான்றனை நண்ணுதற்கே.

100\. பதமும் பதச்சுவை யுங்கவிப் பாகமும் பாகச்செஞ்சொல்
விதமும் விதிவிலக் கில்லா விடினும் வியந்தருளற்
புதமென் றளிரிளந் தேமாவும் பூகப் பொழிலுமழைக்
கிதமென் பசுந்தென்றல் வீசுந்தென் பேரைக் கிறையவனே.

## வாழ்த்து

பார்வாழி நூற்றெண் பதிவாழி மாறன் பனுவலியற்
சீர்வாழி நூற்றெண்மர் நீடூழி வாழியிச் செந்தமிழ்நூல்
ஏர்வாழி மன்ன ரினிதூழி வாழியெந் நாளுமழைக்
கார்வாழி பேரைக் குழைக்காதர் வாழியிக் காசினிக்கே.

99\. மனத்தை அணுவென்பது தார்க்கிகர் மதம். அவன் சேவடிக்கே அன்பு கூராயென்க. கூர்ந்து-நுணுகியாராய்ந்து. மறை பாராயணம் பயில்-வேத பாராயணம் செய்யும். நண்ணுதற்கு வாராய்.

100\. பதம்-செய்யுளமைதி. சுவை-சொற்சுவை பொருட்சுவைகள். கவிப்பாகம்-நாளிகேர பாகம் முதலிய செய்யுட் பாகங்கள். விதிவிலக்கு இல்லாவிடினும்-'விதி இது விலக்கு இது' என்ற வரையறை என் பாக்களில் இல்லாவிடினும். வியந்து அருளுகின்ற அற்புதனே. பூகப்பொழில்-கமுகஞ்சோலை.

**வாழ்த்து:** நூற்றெண்பதி-நூற்றெட்டுத் திருப்பதிகள். மாறன் பனுவல்-நம்மாழ்வார் இயற்றிய திருவாய்மொழி முதலியன. நூற்றெண்மர்-இத்தலத்திலுள்ள தலவகார சாமவேதிகள் நூற்றெண்மர். ஏர்-அழகு.

---

Printed at the:—Vidyanubalana Press, Madras and
Published by:—S. Kalyanasundaram Ayyar.
paper issue Card No, M S. 376. 500 Copies.